

# முன்னுரை

தமிழக மாவட்டங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்பானவை. ஒவ்வொரு மாவட்டத்தின் தேவையையும் அதற்குள்ள இயற்கை வசதிகளையும் கருத்திற்கொண்டு வளர்ச்சித் திட்டங்கள் வகுக்கப்படுகின்றன.

மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றி முடித்துவிட்டோம். இப்பொழுது நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு இறுதி வடிவம் கொடுக்கப்படுகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் நமது கடந்த காலச் சாதனைகளைச் சீர் தூக்கிப் பார்ப்பது நலம்.

கடந்த பதினைந்து ஆண்டுகளில் தஞ்சாவூர் மாவட்டத்தில் நல வளர்ச்சித் திட்டங்களால் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் இந்த நூலில் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது. இது தமிழ்ப் பெரு மக்களுக்குப் பெரிதும் பயன்படும் என்று நம்புகிறோம்.

சென்னை–9
22–11–1966.

நெறியாளர்,
தமிழ்நாடு அரசாங்கச் செய்தித்துறை

# தஞ்சாவூர் மாவட்டம்

தென் ஆர்க்காடு

சீர்காழி

மாயூரம்

கொள்ளிடம் ஆறு

கும்பகோணம்

திருச்சிராப்பள்ளி

காரைக்கால்

நன்னிலம்

பாபநாசம்

தஞ்சாவூர்

நாகப்பட்டினம்

மன்னார்குடி

ஒரத்தநாடு

தலைஞாயிறு

வங்காள விரிகுடா

திருத்துறைப்பூண்டி

வேதாரண்யம்

பட்டுக்கோட்டை

கோடிக்கரை

அறந்தாங்கி

இராமநாதபுரம்

குறிப்பு:

மாவட்டத்தின் பரப்பு ....3,738 ச.மைல்

மக்கள் தொகை ......32·50 லட்சம்

எழுத்தறிவு பெற்றோர்....33·55 சதவிகிதம்

மாவட்ட எல்லை ......

வட்ட எல்லை ........

தேசிய நெடுஞ்சாலை...

மாநில நெடுஞ்சாலை...

ரயில் பாதை........



# பொருளடக்கம்



நாகூர் ஆண்டவர் தர்கா

இந்திய நாட்டின் ஒருமைப்பாடு உணர்ச்சிக்கு ஒரு அழகிய சின்னமாக இருப்பது தஞ்சாவூர் மாவட்டம். தஞ்சைப் பெரிய கோவில், வேளாங்கண்ணி மாதா கோவில், நாகூர் ஆண்டவர் தர்கா ஆகியவை மக்களின் மனதில் தனிஇடம் பெற்றுத்திகழ்கின்றன. இந்தச் சிறப்பையும், தொழில் வளத்தையுமே அட்டைப்படம் சித்தரிக்கிறது.

# புதிய தமிழகம்

நம்முடைய நாடு விவசாய நாடு. நம்முடைய மக்களில் மிகப் பெரும் பகுதியினர் விவசாயிகள். அவ்வளவு பேருக்கும் நிலம் வாழ்வளித்து வந்தது. இன்று நிலம் அந்த நிலையில் இல்லை. விவசாயத் துறையில் மனித சக்தி மிதமிஞ்சி இருப்பதும், நாட்டில் மக்கள் தொகை அதிகரித்திருப்பதும்தான் இதற்குக் காரணங்கள்.

அந்நிய ஆட்சியில் நாட்டில் உணவுத் துறையில் பற்றுக்குறை இருந்தது. அதை ஈடு செய்ய பர்மா போன்ற அயல்நாடுகளிலிருந்து அரிசி இறக்குமதி செய்யப்பட்டது. இந்தப் பற்றுக்குறையைப் போக்க உணவு உற்பத்தியில் மாநிலம் தன்னிறைவு அடையவேண்டும் என்ற லட்சியத்தின் அடிப்படையில், விவசாயத் துறையில் ஐந்தாண்டுத் திட்டங்களின்கீழ் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவற்றின் பயனாக இப்பொழுது உற்பத்தி கணிசமாக அதிகரித்திருக்கிறது. சாகுபடிப் பரப்பை விஸ்தரிப்பதுடன், ஏக்கர் விகித விளைச்சலை அதிகரிக்கும் ஏற்பாடுகள் நல்ல பலன் அளித்துள்ளன. எனினும், பருவமழை பொய்த்துப் போவதாலும், மக்கள் தொகை பெருகியிருப்பதாலும், நாட்டின் மற்றப் பாகங்களில் ஏற்படும் தட்டுப்பாட்டின் விளைவாகவும் நமக்குச் சில சந்தர்ப்பங்களில் பற்றுக்குறை உண்டாகிறது. மக்களின் உணவுப் பழக்கத்திலும் நாம் மாறுதலைக்

காண்கிறோம். மேலும், மாநிலத்தில் மக்கள் நெருக்கம் சதுர மைலுக்கு 669ஆக இருக்கிறது. ஆனால் அனைத்திந்திய சராசரி 373தான். மாநிலத்தில் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சாகுபடிக்கேற்ற நிலம் ஒரு நபருக்கு 0.61 ஏக்கர்தான். பாரதம் முழுவதையும் எடுத்துக்கொண்டு பார்த்தால் இது 0.98 ஏக்கராக உள்ளது. இந்த நிலையில் மாநிலத்தில் பற்றாக்குறை ஏற்படாதவாறு உற்பத்தியைக் குவிக்க வேண்டுமென்றால், அதற்கு மேலும் உறுதியுடன் உழைப்பதுதான் நம் முன் உள்ள வழியாகும்.

உற்பத்தியைப் பெருக்க நாம் மேற்கொண்ட பிரம்மாண்டமான முயற்சியின் ஒரு பகுதியாகவே பாசன அணைகள் கட்டப்பட்டன. மாநிலம் முழுவதும் கிணறுகள் ஆயிரக்கணக்கில் வெட்டப்பட்டன. இதற்குக் குடியானவர்களுக்குக் கடன் உதவி அளிக்கப்பட்டது. ஒவ்வொரு துளி நீரையும் வீணாக்காமல் விவசாயிகள் பாசனத்திற்குப் பயன்படுத்திக் கொண்டனர். இன்று தமிழ்நாட்டில் 37 லட்சம் ஏக்கருக்கும் அதிகமான நிலம் பாசன வசதி பெற்றுள்ளது. மழை பெய்தால்தான் உழவு என்ற நிலை மாறிவிட்டது. இந்தப் புது யுகத்தை அறிவிப்பவைபோல் 2.6 லட்சம் பம்பு செட்டுகள் மாநிலத்தில் இயங்குகின்றன.

## புதியன புகுந்தன

விவசாயத்தில் ஒரு புரட்சி அரும்பியது. பழைய கருவிகளுக்குப் பதில் புதிய விஞ்ஞானக் கருவிகள் இடம் பெற்றன. தற்போது சுமார் 5.18 லட்சம் நவீன கலப்பைகள் பயன்படுத்தப்படுகின்றன. தரம் உயர்ந்த வித்துக்கள் அதிக அளவில் உபயோகிக்கப்படுகின்றன. உரத்தின் அருமையை உணர்ந்துள்ள விவசாயிகள் அவற்றை நன்கு பயன்படுத்திக் கொள்கின்றனர். தமிழ்நாட்டில் ஒரு ஹெக்டாருக்குப் பயன்படுத்தப்படும் உரம், அனைத்திந்திய சராசரியைவிட மூன்று மடங்கு அதிகமாகும். இந்தத் தேவை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இது விவசாயத் துறை மறுமலர்ச்சிக்குச் சிறந்த சான்றாகும்.



வரண்ட நிலத்துக்கு ஒரு வானமுதம்
பரம்பிக்குளம்—ஆளியாறு திட்டம்

தற்போது திட்டக் கமிஷனுடன் விவாதித்து நான்காவது திட்ட முதலீடு முடிவு செய்யப்பட்டுள்ளது. அதன்படி மாநிலத்தில் ரூ. 564 கோடி செலவிடப்படும். இதில் மத்திய உதவி ரூ. 250 கோடி. மாநில அரசாங்கத்தால் நிறைவேற்றப்படும் மத்திய அரசாங்கத் திட்டங்களுக்கான செலவையும் சேர்த்தால், மொத்த முதலீடு ரூ. 600 கோடிக்கும் அதிகமாக இருக்கும்.

இந்தத் திட்டத்தில் விவசாய உற்பத்திப் பெருக்கம் மிக முக்கிய இடம் பெறும். மாநிலத்தின் நான்காவது திட்ட முதலீட்டில் சுமார் 40 சதவிகிதம் விவசாயக் காரியங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது. உணவுத் தானிய உற்பத்தித் திறனை 60 லட்சம் டன்னிலிருந்து 80 லட்சம் டன்னுக அதிகரிப்பது குறிக்கோள். ரசாயன உர உபயோகத்தை அதிகரிப்பது, அதிக விளைச்சலைத் தரும் நெல் ரகங்களைப் பயன்படுத்துவது, கிணறுகளை

ஏராளமாகத் தோண்டுவது போன்ற தீவிர முயற்சிகள் மேற் கொள்ளப்படும். சுமார் 2.5 லட்சம் பம்பு செட்டுகளுக்குப் புதிதாக மின் இணைப்புக் கிடைக்கும். இவ்வகை நடவடிக்கை களால் இந்தக் குறியளவை அடைய முடியும் என்று நம்புகிறோம்.

## தொழில் ஆர்வம்

உற்பத்தி என்று சொல்லும்பொழுது விவசாயம், தொழில் ஆகிய இரு துறைகளையும் அது குறிக்கும். எல்லோரும் விவ சாயத்தில் ஈடுபட முடியாதது மட்டும் அல்ல. மற்ற உபயோகப் பொருள்களும் பண்டங்களும் கருவிகளும் நமக்குத் தேவைப்படு கின்றன. அவற்றைத் தயாரிப்பதற்குத் தொழில்களைப் பெருக்கி வருகிறோம்.

தொழில் வளர்ச்சிக்கு நிலக்கரி மூலாதாரம். தமிழ்நாட் டில் நிலக்கரி கிடைக்காததால், தொழில் வளர்ச்சி பாதிக்கப் பட்டு வந்தது. ஆனால், நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி வெட்டி யெடுக்க ஆரம்பித்ததும், தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சியில் ஒரு புதிய சகாப்தம் பிறந்தது. அனல் மின்சார உற்பத்தி பெருகு வதற்கும், வீடுகளுக்கு மலிவான விலையில் எரிபொருள் கிடைப்ப தற்கும், ரசாயன உர உற்பத்திக்கும் வழி ஏற்பட்டது. இந்த நிலக்கரி வசதியைப் பயன்படுத்தி, சேலம் உருக்காலை அமைக்கும் முயற்சியில் மாநில அரசாங்கம் உறுதியாக இருக்கிறது.

பெரம்பூரில் நவீன வசதிகளுடன் கூடிய பல்வேறு வகை ரயில்பெட்டிகள் தயாரிக்கப்படுகின்றன. ஆவடியில் டாங்க் தொழிற்சாலையும், நந்தம்பாக்கத்தில் அறுவைச் சிகிச்சைக் கருவிகள் தொழிற்சாலையும், கிண்டியில் ஹிந்துஸ்தான் டெலி பிரிண்டர் தொழிற்சாலையும், உதகமண்டலத்தில் ஹிந்துஸ்தான் போட்டோ பிலிம் தொழிற்சாலையும், திருச்சி திருவெறும்பூரில் உயர் அழுத்தக் கொதிகலன் தொழிற்சாலையும் தமிழ்நாட்டின் உயர்வுக்குச் சான்றாக விளங்குகின்றன. மணலியில் எண்ணெய் சுத்திகரிப்பாலை நிறுவவும், மாமல்லபுரம் அருகே கல்பாக்கத்தில் அணு மின் நிலையம் நிறுவவும் திட்டங்கள் உள்ளன.




அறுவை சிகிச்சைக் கருவிகள் தொழிற்சாலை

உருக்குப் பாளங்களைத் தயாரிப்பதற்காக அரக்கோணத்தில் தொடர் உருக்கு வார்ப்படச்சாலை அமைக்கப்பட்டுள்ளது. ராஜபாளையம் அருகே ஆலங்குளத்தில் 6 கோடி ரூபாய் செலவில் தமிழ்நாடு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்தப்பட்டு வருகிறது. நாளொன்றுக்கு 1,200 டன் போர்ட்லாந்து சிமெண்ட் உற்பத்தி செய்வது இதன் நோக்கம்.

## தனியார் துறை வளர்ச்சி

தனியார் துறையிலும் தொழில்கள் தழைத்தோங்கி வருகின்றன. இருபது ஆண்டுகளுக்கு முன் தொழில் நகரங்களாக மதிப்பிடப்பட்ட கோவை, மதுரை போன்றவைகளில் சில பஞ்சாலைகள்தான் இருந்தன. இன்று ஆலைகளும், பல்வேறு வகைத் தொழிற்சாலைகளும் இந்த நகரங்களில் பெருகியிருப்பதோடு, மற்ற நகரங்களிலும் பரவியிருக்கின்றன. பாரதத்தின் நூற்புத்

திறனில் ஐந்தில் ஒரு பங்கு தமிழ்நாட்டில் இருக்கிறது. நூற்பாலைகள், நூற்பு—நெசவாலைகளின் மொத்த எண்ணிக்கை 166. இவற்றைத் தவிர, நெசவாளர்களுக்கு நியாய விலையில் நூல் கிடைக்கவேண்டும் என்பதற்காக 13 கூட்டுறவு நூற்பாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. மாநிலத்தில் 1.21 லட்சம் தொழிலாளர்கள் ஆலைகளில் வேலை செய்கின்றனர்.

பத்தாண்டுகளுக்கு முன் மூன்று சிமெண்ட் தொழிற்சாலைகள்தான் இருந்தன. இப்பொழுது ஐந்து தொழிற்சாலைகள் இருக்கின்றன. இவை ஆண்டொன்றுக்கு மொத்தம் 16.33 லட்சம் டன் சிமெண்ட் உற்பத்தி செய்கின்றன. சிமெண்ட் உற்பத்தியில் மாநிலம் இந்தியாவில் இரண்டாவது இடத்தைப் பெறுகிறது.

தற்போது 15 சர்க்கரை ஆலைகள் உள்ளன. இவற்றில் ஆறு கூட்டுறவு ஆலைகள். சர்க்கரை உற்பத்தி இரண்டு மடங்குக்கும் அதிகமாகியிருக்கிறது. 1956—ல் தமிழ்நாட்டில் காகிதம் உற்பத்தியாகவில்லை. இப்பொழுது மூன்று ஆலைகள் காகிதம் உற்பத்தி செய்கின்றன.

கடந்த பத்தாண்டுகளில் எஞ்சினீயரிங் தொழில்கள் ஆறு மடங்கு அதிகரித்திருக்கின்றன. கார், டிரக் வண்டி, டிராக்டர், மூன்று சக்கர வண்டி, மோட்டார்சைக்கிள், ஸ்கூட்டர், சைக்கிள் போன்றவை இத்துறையில் உற்பத்தியாகின்றன. பம்பு செட்டுகளுக்கு மின்சாரம் அளிப்பதில் மட்டுமல்லாது, அந்தப் பம்பு செட்டுகளை உற்பத்தி செய்வதிலும் தமிழ்நாடு பாரதத்தில் முன்னணியில் இருக்கிறது.

பெரிய தொழில்கள் வளர்ந்தால் மட்டும் போதாது. எண்ணற்றவர்களுக்கு வேலையளிக்கும் சிறு சிறு தொழில்கள் ஏராளமாக ஏற்படவேண்டும். அப்பொழுதுதான் பரவலான தொழில் வளர்ச்சி சாத்தியம். நாட்டின் ஒவ்வொரு பகுதியும் வளம் பெற்று விளங்கும்; தொழில் நுட்பம் தெரிந்த தொழிலாளர்களின் திறன் முழுவதுமாக நாட்டிற்குப் பயன்படும். சிறு

மூலதனம் உள்ளவர்களும் இயந்திர சாதனங்கள், தொழிற்கூடம் போன்ற வசதிகளைப் பெற்றுத் தொழில் தொடங்க, மாநிலத்தில் 22 தொழிற் பண்ணைகளும், தொழிற்பேட்டைகளும் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன. தொழில் வளர்ச்சிக்கு இவை வரப்பிரசாத மாக விளங்குகின்றன. இவற்றில் 4,600 பேர் வேலை வாய்ப்புப் பெற்றுள்ளனர்; ஆண்டுதோறும் ரூ. 8.5 கோடி மதிப்புள்ள பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. இவற்றைத் தவிர, பத்தாயிரத்திற்கும் அதிகமான சிறு அளவுத் தொழில்கள் மாநிலம் எங்கும் பரவி பல்வேறு உபயோகப் பொருள்களை உற் பத்தி செய்து வருகின்றன.

தொழிலாளர்களின் ஒத்துழைப்பு, தொழில் பெருக்கத்திற்கு ஒரு பெரும் காரணமாக உள்ளது. இந்தத் தொழிற்சாலைகளால் ஏராளமான தொழிலாளர்களுக்கும், தொழில் நுட்ப வல்லுநர் களுக்கும் வேலை கிடைத்திருக்கிறது. கூட்டுறவின்கீழ் 2.30 லட்சம் நெசவாளர்கள் பயனடைவதுடன், 1.28 லட்சம் பேர் கதர்த் தொழிலில் வேலை பெற்றுள்ளனர்.

## சீரான சாலைகள்

விவசாயம், தொழில் ஆகியவற்றின் வளர்ச்சியோடு இணைந் தது சாலை அபிவிருத்தி. நல்ல சாலைகள் இருந்தால்தான் மக்கள் சிரமமின்றிப் பல இடங்களுக்குப் போய் வரவும், சரக்குகளை அனுப்பவும், வியாபாரம் பெருகவும் இயலும். பதினைந்தாண்டு களுக்கு முன்னால் மாநிலத்தில் 21,198 மைல் சாலைகள்தான் இருந்தன; இப்பொழுது நல்ல தரம் வாய்ந்த 31,800 மைல் சாலைகள் இருக்கின்றன. இவற்றில் 6,616 பஸ்களும், 13,757 லாரிகளும், 4,245 டாக்ஸிகளும் ஓடுகின்றன.

விவசாயத் துறையிலும் தொழில் துறையிலும் உற்பத்திப் பெருக்கத்திற்கு மிக அடிப்படையான தேவை மின்சாரம். நதி களுக்கு அணை கட்டி மாநிலத்தில் மேலும் நீர் மின்சாரம் உற் பத்தி செய்வதற்கான வாய்ப்பு இல்லை. அதனால், அனல் மின்சார

நிலையங்கள் அமைத்தோம். நாம் எவ்வளவு அதிகமாக மின் சக்தியை உற்பத்தி செய்தாலும் அது நம்முடைய தேவையை முழு அளவில் ஈடு செய்வதாக இல்லை. அதனால் இப்பொழுது அனல் மின்சாரத்தை மேலும் அதிகரிப்பதிலும், அணு மின் சாரத்திலும் சிந்தை செலுத்தி வருகிறோம். பதினைந்து ஆண்டு களுக்கு முன்னால் மாநிலத்தில் 63 கோடி யூனிட் மின்சாரம்தான் உற்பத்தி செய்யப்பட்டது; 1,813 கிராமங்களுக்குத்தான் மின் வசதி கிடைத்தது. இப்பொழுது 404 கோடி யூனிட் மின் சக்தி உற்பத்தியாகிறது; 22,103 கிராமங்களுக்கு மின் வசதி கிடைக் கிறது. நான்காவது திட்ட இறுதியில் எல்லாக் கிராமங்களுக் கும் மின் வசதி கிடைத்துவிடும். கிராமங்களுக்கு மின்சாரம் வழங்குவதில் தொடர்ந்து தமிழ்நாடே பாரதத்தில் முதல் இடம் வகித்து வருகிறது.

## கல்வி வளர்ச்சி

ஜனநாயகத்தின் மிக அடிப்படைத் தேவைகளில் ஒன்றான கல்வி இன்று மக்கள் அனைவருக்கும் உறுதி செய்யப்பட்டுள்ளது. சின்னஞ்சிறு கிராமங்களில்கூட பள்ளிக்கூடங்கள் கட்டப்பட் டிருக்கின்றன. ஏழைக் குழந்தைகளுக்குப் பள்ளிகளிலேயே பக லுணவு அளிக்கிறார்கள். அவர்களுக்குச் சீருடையும், பலகை, புத்தகம் ஆகியவையும்கூட இலவசமாக வழங்கப்படுகின்றன. எஸ். எஸ். எல். சி. வரையுள்ள இலவசக் கல்வியை, கல்லூரிப் படிப்பு வரை விஸ்தரிக்கும் யோசனையும் அரசாங்கத்தின் பரி சீலனையில் உள்ளது.

பெரிய அணைகள், தொழிற்சாலைகள், மின்சார நிலையங்கள் போன்றவை தனித் தனியான திட்டங்கள் அல்ல. நாட்டையே மாற்றியமைக்கும் ஒரு பெரிய வளர்ச்சி யுகத்தின் கூறுகள்தான். இவை ஒன்றுக்கொன்று தொடர்புள்ள ஒரு மாபெரும் லட்சியக் கனவின் பல்வேறு பகுதிகள். அந்த வகையில்தான், அணைகளையும் தொழிற்சாலைகளையும், மின் நிலையங்களையும் அமைக்கவும், அவற்றைத் தொடர்ந்து பராமரித்து வரவும் நமக்குத் தொழில்



ஆவடி தொழிற்சாலையில் உற்பத்தியான டாங்க்

நுட்ப நிபுணர்கள் தேவைப்படுகின்றனர். அவர்களைக் கூடவே உருவாக்கி வர எஞ்சினீயரிங், தொழில் நுட்ப நிலையங்கள் பெருகுகின்றன. ஒரு புதிய சமுதாய அமைப்பை உருவாக்கவே நாம் பாடுபடுகிறோம். அதற்கேற்ப ஆள் பலத்தையும், அவர்களது தொழில் நுட்பத் திறனையும் பெருக்குகிறோம். இல்லாவிட்டால் சமூக ஓட்டம் தடைப்பட்டுவிடும்.

தற்போது 12 எஞ்சினீயரிங் கல்லூரிகளும், 35 பாலிடெக்னிக்குகளும், 14 ஜூனியர் தொழிற்பள்ளிகளும் இப்பணியை நிறைவேற்றி வருகின்றன. வசதிக் குறைவான மக்கள் போதிய வாய்ப்புக்கள் பெறுவது நமது சோஷலிச சமுதாய அமைப்பில் மிக முக்கியமான அம்சம் ஆகும். அதற்கு இசைந்த முறையில் மத்திய, மாநில அரசாங்கங்களால் சுமார் 15 கோடி ரூபாய் உபகாரச் சம்பளமாக வழங்கப்படுகிறது. சுமார் 3 லட்சம் மாணவர்கள் பயனடைகின்றனர். மேலும், ஹரிஜன முன்னேற்றப் பணி

யில் அகில இந்தியாவிலும் தமிழகம்தான் முன்னணியில் உள்ளது.

## பிணி தீர்க்கும் பணி

மாநிலம் முழுவதிலும் மருத்துவ மனைகளின் எண்ணிக்கை கடந்த பதினைந்தாண்டுகளில் இரண்டு மடங்குக்கும் அதிகமாகி யிருக்கிறது. கிராமங்களில் குடிநீர்க் கிணறுகள் தோண்டப்பட் டுள்ளன. கொள்ளை நோய்கள் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. தொழிலாளர்களுக்கும் அவர்களது குடும்பத்தினருக்கும் பிரத் யேக வைத்திய உதவி அளிக்க, தொழிலாளர்களுக்கான அர சாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டம் செயல்படுகிறது. அரசாங்க ஊழியர்களுக்கு வைத்தியச் சலுகை கிடைக்கிறது.

குடும்ப வாழ்க்கைக்கு இன்றியமையாதது குடியிருப்பு. ஏழைகளும் வீடு கட்டிக்கொண்டு மகிழ்ச்சியாக வாழவேண்டும். அதனுல் பல்வேறு வீடு கட்டும் திட்டங்களுக்குப் பண உதவி செய்யப்படுகிறது. இத்திட்டங்களால், சாதாரண வருமானக் காரர்களும் சொந்தமாக வீடு கட்டிக்கொள்ள வழி ஏற்பட்டுள் ளது. ஹரிஜனங்கள் வீடு கட்டிக் கொள்ளக் கடனும் மானியமும் வழங்கப்படுவதுடன், வீட்டு மனைகளும் அளிக்கப்படுகின்றன. கடந்த பதினைந்தாண்டுகளில் ஹரிஜனங்களுக்கு ஒரு லட்சத்திற் கும் அதிகமான மனைகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

பாரத நாட்டின் பிற பகுதிகளோடு ஒப்பிடும்பொழுது நமது மாநிலத்தின் சாதனைகள் சிறப்பாக இருக்கின்றன. பாரதத் தலைவர்களும் அயல்நாட்டு நிபுணர்களும் இதைப் பாராட்டி யுள்ளனர். தமிழக மக்கள் ஆக்க வழிகளில் சிந்தை செலுத்தி அரிய சாதனைகளில் கண்ணுங்கருத்துமாக இருந்து வருவதுதான் இதற்குக் காரணம். இந்த ஒத்துழைப்பு, திட்டங்களுக்குத் தொடர்ந்து கிடைத்து வருமானுல், புதிய தமிழகத்தை உருவாக் கும் நம்முடைய மகத்தான முயற்சிகள் விரைவில் நிறைவேறும் என்பதில் ஐயமில்லை.

அலை பரப்பிச் செல்லும் காவிரியாற்றின் கரையில் சற்று நேரம் நின்றால் எண்ணங்கள் எங்கெங்கோ செல்கின்றன. பல நூறு ஆண்டுகளுக்கும் முந்திய ஒரு புராதனமான வரலாறு நெஞ்சில் விரிகிறது.

# தனிப் பெரும் தஞ்சை



தமிழ்நாட்டின் தனிப்பெருங் கலையான கர்நாடக சங்கீதம் வளர்ந்தது இந்தக் கரையில்தான். நாதசுரம் என்று சொல்லப் படும் ஊது குழலிலிருந்து உணர்வுகளை மயக்கும் உயர்ந்த இசை வெள்ளம் பெருக்கெடுத்தோடியது இந்தக் கரையில்தான். நடன, நாட்டியங்களுள் உயர்ந்த பரதக் கலையைப் பாதுகாத்து வளர்த்தது இந்தக் கரைதான். உலக மக்கள் பலரும் பார்த்துப் பாராட்டக்கூடிய சிற்ப சித்திரக் கலைகள் செழித்து வளர்ந்தது இந்தக் கரையில்தான். ஒரு காலத்தில் இந்தியாவெங்கிலும்

புகழோடு விளங்கி, பல வெளிநாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த சோழ சாம்ராஜ்யத்தின் நிலைக்களனுக இருந்ததும் இந்தக் கரைதான். சுருங்கக் கூறினுல், தமிழ் நாட்டின் சிறப்புமிக்க, இலக்கிய மணம் வீசும் பகுதி காவிரிக் கரை. இந்தக் கரையின் இருமருங்கிலும் விரிந்து கிடக்கும் மாவட்டமே தஞ்சை மாவட்டம்.

## இயற்கை அமைப்பு

இம்மாவட்டத்தின் பரப்பளவு 3,738 சதுர மைல்கள். இதற்கு வடக்கே தென் ஆர்க்காடு மாவட்டமும், வடக்கிலும் மேற்கிலும் திருச்சி மாவட்டமும், தெற்கே ராமநாதபுர மாவட்டமும், கிழக்கே வங்காள விரிகுடாவும் உள்ளன.

தமிழ்நாட்டிலேயே நீர் வளமும், இயற்கை அழகும் மிகுந்த பகுதி தஞ்சை மாவட்டம். இதற்குக் காரணம் காவிரி ஆறு. இம்மாவட்டத்தின் உயிரோட்டமாக இந்த ஆறு விளங்கு கிறது. மேலணைக்கு அருகில் காவிரி இரண்டாகப் பிரிகிறது. ஒன்று காவிரி; மற்றென்று கொள்ளிடம். இதில் காவிரியானது தஞ்சையில் புகுந்தபின் மேலும் பல கிளை ஆறுகளாகப் பிரிந்து, உடலிலுள்ள ரத்த நாளங்களைப் போல் மாவட்டம் முழுவதும் பாய்கிறது. இந்தக் கிளை ஆறுகளுள் முக்கியமானவை வெண்ணுறு, குடமுருட்டியாறு, அரசலாறு ஆகியவை ஆகும். இந்த ஆறுகளிலிருந்தும் பல கிளைகள் கால்வாய்களாகப் பிரிகின்றன. தொடர்ந்தாற்போல் ஒரிரு மைல் தூரத்துக்கு சிற்ருறே, கால்வாயோ, ஏரியோ, குளமோ இல்லாத பகுதியே தஞ்சை மாவட்டத்தில் இல்லை. இந்த நீர்ப்பாசன ஆதாரங் களினுல் இம்மாவட்டத்தில் சுமார் 15 லட்சம் ஏக்கர்கள் பாசன வசதி பெறுகின்றன.

தஞ்சையில் காடுகளோ, மலைப் பகுதிகளோ அதிகம் இல்லை. கோடிக்கரைப் பகுதியில் மட்டும் சுமார் 4,500 ஏக்கர்கள் காடு களாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

1961ம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி இம்மாவட்டத்தின் மக்கள் தொகை சுமார் 32.50 லட்சம். ஆண்கள் 16.13 லட்சம். பெண்கள் 16.37 லட்சம். 1951ல் இருந்ததைவிட மொத்த ஜனத் தொகை 2.6 லட்சம் அதிகரித்துள்ளது. எழுத்தறிவு பெற்ற வர்கள் சதவிகிதம் 33.55.

மொத்த மக்கள் தொகையில் 25.8 லட்சம் பேர் கிராமப் பகுதிகளிலும், 6.7 லட்சம் பேர் நகர்ப்புறங்களிலும் வாழ் கின்றனர். தஞ்சை மாவட்ட மக்களில் 89.60 சதவிகிதத்தினர் இந்துக்கள்; 6.20 சதவிகிதத்தினர் முஸ்லீம்கள்; 3.74 சதவிகிதத் தினர் கிருஸ்துவர்கள்; எஞ்சியவர்களில் சீக்கிய, சமண மதங்களைச் சேர்ந்தவர்களும் உண்டு. இனி, குறிப்பிட்ட சில அம் சங்களில் தமிழ்நாட்டையும்—அதில் ஒரு அங்கமான தஞ்சை மாவட்டத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

| | தமிழ் நாடு | தஞ்சாவூர் மாவட்டம் |
|---|---|---|
| சராசரி சதுர மைலுக்கு ஜனத் தொகை | 672 | 868 |
| சராசரி 1000 பேர்களில் எழுத் தறிவு பெற்றவர்கள் | 314 | 335 |
| எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் சதவிகிதம் | 31.41 | 33.55 |
| சராசரி 1000 பேர்களில் தொழி லாளர்கள் | 456 | 420 |
| சராசரி ஒரு சதுர மைல் பரப் பளவுக்கு சாலை வசதி | ½ மைல் | 1 மைல் |

சுதந்திரப் போராட்டத்தில் தஞ்சை மாவட்டம் தன் பங்கினைச் சிறப்பாகச் செய்து முடித்துள்ளது. நாகைப்பட்டினம் ரயில்வே தொழிலாளரிடையே திரு. பி. வரதராஜுலு நாயுடு, திரு. வி. க. போன்றோர் "ஹோம் ரூல்" இயக்கத்தைப் பரப்பினார்கள். தமிழ் நாட்டின் உயர்ந்த தேசியத் தலைவர்களுள் தஞ்சை மாவட்டம் அளித்த காலஞ்சென்ற சர்தார் வேதரத்னமும் ஒருவர்.

## நிர்வாகம்

இம்மாவட்டம் 6 ரெவின்யூப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இப்பிரிவுகளில் 12 வட்டங்கள் அடங்கியுள்ளன.

*1951*ல் *11* வட்டங்கள்தான் இருந்தன. ஒரத்தநாடு வட்டம் *1954*ல் ஏற்படுத்தப்பட்டது.

| ரெவின்யூப் பிரிவு | வட்டங்கள் | வட்டங்களின் பரப்பளவு சதுர மைல் |
|---|---|---|
| கும்பகோணம் | கும்பகோணம் | 211.8 |
| | பாபநாசம் | 228.1 |
| நாகப்பட்டினம் | நாகப்பட்டினம் | 241 |
| | நன்னிலம் | 290.7 |
| மாயவரம் | மாயவரம் | 282.5 |
| | சீர்காழி | 170.6 |
| தஞ்சாவூர் | தஞ்சாவூர் | 361.4 |
| | ஒரத்தநாடு | 348.2 |
| மன்னார்குடி | மன்னார்குடி | 301.5 |
| | திருத்துறைப் பூண்டி | 496.2 |
| பட்டுக்கோட்டை | பட்டுக்கோட்டை | 406.7 |
| | அறந்தாங்கி | 401.2 |

தஞ்சையின் தலையாய தொழில் வேளாண்மையே. சுமார் 17 லட்சம் ஏக்கர்களில் உழவு வேலைகள் நடைபெறுகின்றன உற்பத்தியாகும் உணவுப் பொருள்களில் நெல்தான் முக்கியமானது. சுமார் 14.50 லட்சம் ஏக்கர்களில் நெல் பயிரிடப்படுகிறது. மற்றபடி சுமார் 67,000 ஏக்கர்களில் சோளம், கம்பு மற்றும் இதர தானியங்களும், 1.16 லட்சம் ஏக்கர்களில் பயறு வகைகளும், சுமார் 10,000 ஏக்கர்களில் கரும்பும் பயிரிடப்படுகிறது. புகையிலையும் உற்பத்தி செய்யப்படுகிறது.

## புதிய தொழில்கள்

ஆதியிலிருந்தே தஞ்சையில் வேளாண்மைதான் முக்கியமாகக் கவனிக்கப்பட்டு வந்தது. ஆகவே மற்ற தொழில்கள் வளர்வதற்கான வாய்ப்புக்கள் இல்லாமல் இருந்தன. நாடு விடுதலை அடைந்த பிறகு இந்தக் குறை நிவர்த்திக்கப்பட்டு, தற்போது படிப்படியாகத் தொழில் வளர்ச்சி ஏற்பட்டு வருகிறது. ஒரு சர்க்கரை ஆலையும், ஒரு நூற்பாலையும், இரண்டு பஞ்சாலைகளும் உள்ளன. நம்பிவயல் என்ற கிராமத்துக்கு அருகில் ஒரு காகிதத் தொழிற்சாலை உருவாகி வருகிறது.

காவேரி நதி தீரத்தில் எண்ணெய் வளம் இருப்பதாகக் கருதப்படுகிறது. தஞ்சை மாவட்டத்தின் கடற்கரைகளில் அலைகள் ஒருவிதமான எண்ணெய்க் கலப்பு கொண்டதாகத் தெரிகிறது.

## போக்குவரத்து

தஞ்சை மாவட்டத்தில் நீர் நிலைகளும், கால்வாய்களும் அதிகம். ஆகையால் சாலைகள் வளைந்தும் நெளிந்தும் அமைந்து, விரைவான போக்குவரத்துக்கு ஓரளவு பாதகமாகவே இருக்கின்றன. மாவட்டத்தின் பல ஊர்களுக்கு ரயில் போக்குவரத்து வசதியும் உண்டு. சுமார் 700க்கும் மேற்பட்ட அஞ்சல் நிலையங்கள் உள்ளன. தொலைபேசி வசதியும் இம்மாவட்டத்தின் முக்கிய நகரங்களில் செய்து தரப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்டத்துக்கு 140 மைல் நீளக் கடற்கரை உள்ளது. நாகூர், கோடிக்கரை, நாகப்பட்டினம், தரங்கம்பாடி ஆகியவை துறைமுக ஊர்கள்.

## தனிச் சிறப்புகள்

வேறு எந்த மாவட்டத்துக்கும் இல்லாத சில தனிச் சிறப்புகள் தஞ்சை மாவட்டத்துக்கு உண்டு.



இம்மாவட்டத்தில் சுமார் 1,420 கோயில்கள் உள்ளன. இவ்வளவு கோயில்கள் வேறு எந்த மாவட்டத்திலும் இல்லை. தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயம், குடந்தை சாரங்கபாணி ஆலயம், சிக்கல் சிங்கார வேலர் ஆலயம், வேளாங்கண்ணிமாதா கோயில், நாகூர் ஆண்டவர் தர்கா ஆகியவை மக்கள் மனதில் தனி இடம் பெற்றுத் திகழ்கின்றன.

பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு சிற்பிகள் நமது ஆலயங்களில் தெய்வீகத்தன்மை பொருந்திய பல சிலைகளைச் செதுக்கி அமைத்தார்கள். அற்புதமான அந்தச் சிலைகளைப் போலவே பித்தளைப் படிமங்கள் தயாரிக்கும் உயரிய கலையைத் தஞ்சை மாவட்டத்தின் சுவாமிமலையில் தான் காணமுடியும்.



கண்ணைக்கவரும் கலை அழகோடு – உருவங்கள் செதுக்கிய சித்திரத் தட்டுகளை உருவாக்குவதற்கு தஞ்சை மாவட்டத்தில் ஒரு கும்பகோணம்.

இவ்வாறு தஞ்சாவூர் மாவட்டம் பொன் போன்ற பழமையைப் பாதுகாக்கிறது. தெய்வீகக் கலைகளை வளர்க்கிறது.

ஆம். தஞ்சையென்றால் தன்னேரிலா தனிப் பெரும் தஞ்சை!

ஒரு ஆண்டில் எல்லா நாட்களிலும் மழை பெய்வதில்லை. குறிப்பிட்ட சில பருவக் காலங்களிலும், வேறு சில சமயங்களிலும்தான் மழை பொழிகிறது. மழை பெய்யும் காலமாகப் பார்த்துத்தான் வேளாண்மை வேலைகள் நடைபெறுகின்றன.



# பாசனம்

ஆனால், அது மட்டும் போதாது. மழை இல்லாத வேறு காலங்களிலும் வேளாண்மை நடக்கிறது. அதற்கு நீர் வேண்டும். அத்துடன் பருவக் காலங்களில் கூட சில சமயங்களில் மழை பெய்யாமல் பொய்த்து விடுவதுண்டு. இந்த இக்கட்டையும் சமாளிக்க வேண்டும். இந்த நோக்கங்களுக்காகவே ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டி மழை நீரும், ஊற்று நீரிலிருந்து பெருக்கெடுத்தோடும் ஆற்று நீரும் தேக்கி வைக்கப்படுகின்றன. இதனால், கடந்த பதினைந்து ஆண்டுக் காலத்தில் தமிழ்நாட்டில் பாசன

வசதிகள் பெருகியுள்ளன. இனி, தஞ்சை மாவட்டத்தைப் பார்ப்போம்.

தஞ்சை மாவட்டத்தில் மட்டும் சுமார் 15 லட்சம் ஏக்கர்கள் பாசன வசதி பெற்று வருகின்றன. அதாவது மொத்த விளை நிலத்தில் சுமார் 79 சதவிகிதம் பாசன வசதி பெற்றுள்ளது. இம்மாவட்டத்தின் முக்கியமான பாசன ஆதாரம் காவிரி நதி. இலக்கியங்களிலும், தமிழ் மக்களின் இதயங்களிலும் இடம் பெற்றுள்ள நதி. வானம் மழை பொழிய மறந்தாலும், காவிரியில் தண்ணீர் வரத் தவறுது என்று சொல்லுவார்கள். அந்தக் காவிரி நதியின் மகிமையால்தான், தஞ்சாவூர் மாவட்டம் "தமிழ்நாட்டின் நெற்களஞ்சியம்" என்று பாராட்டப்படுகிறது. தமிழ்நாட்டில் உபரியாக நெல் விளைவிக்கும் மாவட்டம் தஞ்சாவூர்தான். அதற்கு அடிப்படையான காரணம் காவிரி நதி.

## முப்பெரும் பிரிவுகள்

காவிரியின் முக்கியமான கிளை நதி வெண்ணாறு. இந்த ஆற்றிலிருந்து வேறு பல கிளை நதிகள் பிரிகின்றன. காவிரியிலிருந்தும், வெண்ணாறு மற்றும் அதன் கிளை நதிகளிலிருந்தும் பிரிகின்ற கால்வாய்கள் சுமார் 9 லட்சம் ஏக்கர்களுக்குப் பாசன வசதி அளிக்கின்றன. இப்பகுதிகள் பழைய டெல்டா என்று பிரிக்கப்பட்டுள்ளன. புதிய டெல்டா என்பது கல்லணைக் கால்வாயால் பாசன வசதி பெறும் பகுதிகளைக் கொண்டதாகும். இக்கால்வாயானது காவிரி மேட்டூர்த் திட்டத்தின் ஒரு பாகமாகும்.

வெண்ணாறு பாசனத் திட்டத்தால், தஞ்சாவூர், பாபநாசம், திருத்துறைப்பூண்டி, நாகப்பட்டினம் ஆகிய வட்டங்களில் 3.5 லட்சம் ஏக்கர்களில் முதல் போக சாகுபடிக்கும், 1.25 லட்சம் ஏக்கர்களில் இரண்டாம் போக சாகுபடிக்கும் பாசன வசதி கிட்டுகிறது.

கல்லணைக் கால்வாயானது தஞ்சாவூர், பாபநாசம், மன்னார்குடி, அறந்தாங்கி, திருத்துறைப்பூண்டி, ஒரத்தநாடு, பட்டுக்கோட்டை ஆகிய வட்டங்களில் 2.56 லட்சம் ஏக்கர்களுக்குப் பாசன வசதி அளிக்கிறது.

வெண்ணாற்றிலிருந்து வடவாறு என்று ஒரு கிளை நதி பிரிகிறது. இதிலிருந்து வடவாறு விஸ்தரிப்புக் கால்வாய் ஒன்று வெட்டப்பட்டுள்ளது. இக்கால்வாயால் புதிதாக 43,000 ஏக்கர்கள் பாசன வசதி பெறுகின்றன.

அடுத்தது உய்யக்கொண்டான் விஸ்தரிப்புக் கால்வாய் ஆகும். தஞ்சாவூர் வட்டத்தில் உள்ள சில ஏரிகளில் இந்தக் கால்வாயால் தண்ணீர் நிரம்புகிறது.

குழாய் ஏற்றப் பாசனம்



தஞ்சாவூர் மாவட்டத்தில் மற்றொரு முக்கியமான பாசன ஆதாரம் புதிய கட்டளை உயர் மட்டக் கால்வாய் ஆகும். இது, அகண்ட காவிரியில் வலது கரையில் கட்டளைக்கரை ரெகுலேட்டருக்குச் சற்று மேலாக வெட்டப்பட்டுள்ளது. இது திருச்சி மாவட்டத்தில் உள்ளதெனினும், தஞ்சாவூர் மாவட்டத்தில் 4,564 ஏக்கர்களுக்குப் பாசன வசதி அளிக்கிறது. இக்கால்வாய் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வெட்டப்பட்டதாகும்.

தஞ்சை மாவட்டத்தில் ஆதாரமாக விளங்கும் பாசனப் பிரிவுகளை காவிரிப் பிரிவு, வெண்ணாற்றுப் பிரிவு, கல்லணைக் கால்வாய்ப் பிரிவு என்று மூன்றாகப் பிரிக்கலாம். இப்பிரிவுகளில் கடந்த 15 ஆண்டுக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட சில முக்கியமான பாசன அபிவிருத்திப் பணிகளைச் சுருக்கமாகக் காணலாம்.

## காவிரிப் பிரிவு

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் சீர்காழி, நன்னிலம், மாயவரம் ஆகிய வட்டங்களில் வடிகால் அபிவிருத்தி வேலைகள் முடிவுற்றன. ரூபாய் 5 லட்சம் செலவில் 28 சிறு பாசனத் திட்டங்கள் முடிக்கப்பட்டன. இத்திட்டங்களால் 18,898 ஏக்கர் நிலங்களுக்குப் பாசனம் உறுதிப்படுத்தப்பட்டது.

இரண்டாவது திட்டக் காலத்தில் ரூபாய் 4.31 லட்சம் செலவில் 34 சிறு பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. 11,895 ஏக்கர்களுக்குப் பாசனம் உறுதிப்படுத்தப்பட்டதுடன், புதிதாக சுமார் 330 ஏக்கர்களுக்குப் பாசனம் கிடைத்தது. அரசலாற்றுக்குக் குறுக்கே ஒரு மதகு கட்டப்பட்டது. மஞ்சளாறு, தென்கோரையாறு வடிகால்கள் அபிவிருத்தி செய்யப்பட்டன.

மூன்றாவது திட்டக் காலத்தில் ரூபாய் 2.56 லட்சம் செலவில் 14 சிறு பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. 7,067 ஏக்கர் நிலங்களுக்குப் பாசனம் உறுதிப்படுத்தப்பட்டது. பீமன் ஓடை வடிகால் அபிவிருத்தி வேலைகள் முடிவுற்றன.

முதல் திட்டக்காலத்தில் முல்லையாறு, தீவாம்பாள்புரம் ஆகிய பகுதிகளில் குழாய் ஏற்றப் பாசனத் திட்டங்கள் முடிக்கப் பெற்றன. இதன் பயனாக சுமார் 1,900 ஏக்கர்களுக்குப் பாசன வசதி கிடைத்தது. இவையல்லாமல் 15 சிறு பாசனத் திட்டங்களும் நிறைவேற்றப்பட்டன. இவற்றுள், ஜம்புவனூர் கிராமத்தில் தரிசாகக் கிடந்த 410 ஏக்கர்களுக்குப் பாசன வசதி செய்து தரப்பட்டதைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

இரண்டாவது திட்டக் காலத்தில் வெட்டாறுக்குக் குறுக்கே ஒரு சிறு அணை கட்டப்பட்டது. கோயில்பட்டு, அய்யக்காரம்பலம், அய்யனூர், வடுகூர் ஆகிய கிராமங்களில் குழாய் ஏற்றப் பாசனத் திட்டங்களின் மூலம் 1,800 ஏக்கர்களுக்குப் பாசன வசதி செய்து தரப்பட்டது.

மூன்றாவது திட்டக் காலத்தில் ரூபாய் 8.58 லட்சம் செலவில் 32 சிறு பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இதன் பயனாக 24.600 ஏக்கர் நிலங்களுக்குப் பாசனம் உறுதிப்படுத்தப் பட்டதுடன், புதிதாக 2,100 ஏக்கர்களுக்குப் பாசனம் கிடைத்தது.

**கல்லணைக் கால்வாய்ப் பிரிவு**

முதல் திட்டக் காலத்தில், ரூபாய் 1.25 லட்சம் செலவில் ஊமத்தநாடு குளமும், ஏரிப்புரக்கரை பெரிய ஏரியும் செப்பனிடப்பட்டன. சாயக்குடி, மற்றும் இதர நான்கு ஏரிகளுக்குத் தண்ணீர் கிடைக்கச் செய்வதற்கான வேலைகள் முடிக்கப் பெற்றன. 4.463 ஏக்கர்கள் பாசன வசதி அடைந்தன.

இரண்டாவது திட்டக் காலத்தில் நல்லவன்னியன்குடிக்காடு நிலப் பண்ணைத் திட்டத்தில் வடிகால் அபிவிருத்தி செய்யப் பட்டது. மகாராஜசமுத்திரம் ஆற்றுக்குக் குறுக்கே ஒரு படுகை அணை கட்டப்பட்டது.

மூன்றாவது திட்டக் காலத்தில் ரூபாய் 1.50 லட்சம் செலவில் சிரமேல்குடி கோட்டகம் கரை செப்பனிடப்பட்டது. களகத்தூர் வாரிக்குக் குறுக்கே ஒரு மதகும், வெள்ளாறுக்குக்

குறுக்கே ஒரு சிறு அணையும் கட்டப்பட்டதுடன், பட்டுவனச்சி வடிகால் அபிவிருத்தி செய்யப்பட்டது.

காவேரி டெல்டாவில் உள்ள கால்வாய்களையெல்லாம் நவீன முறைப்படிப் புதுப்பிப்பதற்காக ரூ. 12 கோடி செலவில் சில அபிவிருத்தித் திட்டங்கள் பரிசீலனையில் உள்ளன. இதற்கென்று ஒரு விசேஷ நிர்வாகப் பிரிவும் அமைக்கப்பட்டு பரிசீலனை நடைபெற்று வருகிறது. மூன்றாவது திட்டக் காலத்தில் காவிரியிலும், வெண்ணாற்றிலும் சில கால்வாய்களின் சீரமைப்புக்கான திட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட்டு ஒரு பகுதி முடிவுற்றது. மேலும் சில திட்டங்களை நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டுள்ளது. இதேபோல் கல்லணைக் கால்வாயையும், அதைச் சேர்ந்த இதர கால்வாய்களையும் நவீன முறையில் செப்பனிடும் பணியையும் நான்காவது திட்டக்காலத்தில் மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டுள்ளது.



## மின்சாரத்தின் உதவி

தஞ்சை மாவட்டத்தின் வேளாண்மைச் சிறப்புக்குப் பெரிதும் துணையாக இருப்பது மின்சாரம் ஆகும். பூமிக்கடியில் வெகு ஆழத்தில் உள்ள நீரை மின்சாரப் பம்புகளின் உதவியால் வெளிக் கொணரும் திட்டம் தஞ்சையில் தீவிரமாகச் செயல் படுத்தப்பட்டது. இவ்வகையில் ரூபாய் 27.35 லட்சம் செலவில் 9 திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இவற்றால் 10,560 ஏக்கர் களுக்குப் பாசன வசதி கிடைக்கச் செய்யவேண்டும் என்று திட்ட மிடப்பட்டுள்ளது. இதுவரை சுமார் 5,800 ஏக்கர்களுக்குப் பாசன வசதி தரப்பட்டு வருகிறது. இவையல்லாமல் ரூபாய் 23.60 லட்சம் செலவில் 5 திட்டங்கள் உருவாகி வருகின்றன. இவற்றால் 4,011 ஏக்கர்கள் பாசன வசதி பெறும்.

மூன்றாவது திட்டக் காலத்தில் முடிவடைந்த விசேஷ சிறு பாசனத் திட்டங்கள் போக, 19 திட்டங்கள் தற்போது

கல்லணை



பரிசீலனையில் உள்ளன. இவற்றுக்கு ரூபாய் 54.17 லட்சம் செலவாகும் என்றும், இத்திட்டங்களால் 8,675 ஏக்கர்கள் பயனடையும் என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது.

முன்பு காவிரி, வெண்ணாறு பகுதிகளில் விவசாயிகள் தாமாகவே முன்வந்து ஏரி மற்றும் கால்வாய்களைச் செப்பனிடுவார்கள். இதற்குக் "குடிமராமத்து" என்று பெயர். இந்த வழக்கம் நாளடைவில் இல்லாமல் போகவே, பல ஏரி குளங்களில் தூர் நிரம்பிவிட்டது. எனவே மறுபடியும் குடி மராமத்து வேலையைத் தொடங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது இதில் விவசாயிகளுக்கு உதவியாக அரசாங்கமும் பங்கேற்றது.

இதனால் 1961–62ல் 2. 45 லட்சம் ஏக்கர்களும், 63–64ல் 5.6 லட்சம் ஏக்கர்களும், 64–65ல் 3.7 லட்சம் ஏக்கர்களும், 65–66ல் 3.6 லட்சம் ஏக்கர்களும் பாசன வசதி பெற்றன. இப்பணிகளுக்காக அரசாங்கம் மேற்சொன்ன நான்கு ஆண்டுகளில் ரூபாய் 15.4 லட்சம் மான்யமாகக் கொடுத்துள்ளது.

### கிணற்றுப் பாசனம்

விவசாயிகள் தங்கள் நிலங்களில் கிணறுகள் வெட்டிக் கொள்வதற்காகப் பெருமளவில் நிதி உதவி தரப்பட்டது. இத் திட்டம் இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் அமுல் நடத்தப்பட்டது. இரண்டாவது திட் டத்தின் கடைசி மூன்று ஆண்டுகளில் 163 கிணறுகள் வெட்டவும், மூன்றாவது திட்டக்காலத்தில் 1,334 கிணறுகள் வெட்டவும் அரசாங்கம் நிதி உதவி செய்தது.

பழைய டெல்டாப் பகுதிகளில் 3,274 வடிமுனைக் குழாய்க் கிணறுகள் வெட்டப்பட்டன.

தனி ஒரு குடும்பத்துக்காகட்டும், அல்லது ஒரு நாட்டுக்காகட்டும் அதன் அடிப்படையான பலம் உணவில்தான் இருக்கிறது. போதுமான உணவு இருந்தால் போதுமான பலமும், வளமும் இருக்கும். மற்றெல்லாத் தேவைகளையும் விட, உணவு

# வேளாண்மை



தான் அதிகமாகத் தேவைப்படுகிறது. உணவுப் பொருள்கள் பெருகினால், உணவு உற்பத்தியில் நாம் தன்னிறைவு கண்டால் மற்றப் பிரச்னைகளை மிகச் சுலபத்தில் தீர்த்துவிட முடியும்.

இதனாலேயே ஐந்தாண்டுத் திட்டங்களில் உணவு உற்பத்திக்கான பல நடவடிக்கைகள் இடம் பெற்றுள்ளன. இவற்றின் பயனாகக் கடந்த பதினைந்து ஆண்டுகளில் எல்லா வகையான உணவுப் பொருள்களின் உற்பத்தியும் அதிகரித்துள்ளது.

தமிழ்நாட்டின் உணவு உற்பத்தியில் முதலிடம் பெறுவது தஞ்சை மாவட்டமே. நெடுங்காலமாக இம்மாவட்டத்தின் தலை

யாய தொழிலாக விவசாயமே இருந்து வருகிறது. எனினும் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமான பிறகுதான் தீவிரமாகவும், திட்டமிட்ட ரீதியிலும் விவசாயக் காரியங்கள் நடைபெறத் தொடங்கின. அதன் விளைவாக, கடந்த பதினைந்து ஆண்டுக் காலத்தில் இம்மாவட்டத்தின் உணவு உற்பத்தி சுமார் மூன்றில் ஒரு பங்கு அதிகரித்துள்ளது.

இம்மாவட்டத்தின் மொத்தப் பரப்பளவில் (3,738 சதுர மைல்) சுமார் 60.6 சதவிகித நிலத்தில் சாகுபடி நடைபெறு கிறது. இதில் ஏறக்குறைய 88 சதவிகித நிலத்தில் உணவுத் தானி யங்களே பயிரிடப்படுகின்றன. அதுவும் 77 சதவிகித நிலம் நெல் விளையும் கழனிகளாகும்.

## உணவுப் பெருக்கம்

முதல் ஐந்தாண்டுத் திட்டத் தொடக்கத்தில் (1951–52ல்) சுமார் 15.17 லட்சம் ஏக்கர்களில்தான் உணவுப் பொருள் சாகுபடி நடைபெற்றது. ஆனால் சுமார் பதினைந்து ஆண்டு களுக்குப் பிறகு அதாவது 1964–65ல் இது 17.15 லட்சமாக அதி கரித்தது. ஒரு போகத்திற்கும் அதிகமாகச் சாகுபடியாகும் பரப்பு முன்பு 2.50 லட்சம் ஏக்கர்கள். தற்போது சுமார் 4.50 லட்சம் ஏக்கர்கள்.

மேற்சொன்ன கால அளவில் நெல் பயிராகும் பரப்பளவு 11.3 சதவிகிதம் அதிகரித்துள்ளது. கூடுதலான பாசன வசதி தரப்பெற்றதால், இந்த சாதனை கிட்டியுள்ளது.



## அட்டவணை 1

| ஆண்டு | பாசனம் பெற்ற பரப்பளவு | உணவுப் பொருள் பயிரான பரப்பளவு | நெல் பயிரான பரப்பளவு |
|---|---|---|---|
| | லட்சம் ஏக்கர் | லட்சம் ஏக்கர் | லட்சம் ஏக்கர் |
| 1951-52 | 13·36 | 15·17 | 13·36 |
| 1955-56 | 13·56 | 15·23 | 13·50 |
| 1960-61 | 14·97 | 16·73 | 14·78 |
| 1964-65 | 14·98 | 17·15 | 14·87 |

சாகுபடியாகும் பரப்பளவு அதிகரிக்கப்பட்டதோடு, சராசரி ஏக்கருக்குக் கிடைத்த விளைச்சலும் படிப்படியாக உயர்ந்துள்ளது.

1955–56–ல் சராசரி ஏக்கருக்கு அரிசி உற்பத்தி 1,016 பவுண்டு. 1964–65ல் 1,565 பவுண்டு. ஒன்பது ஆண்டுகளில் சராசரி ஏக்கரில் அரிசி விளைச்சல் சுமார் 450 பவுண்டு கூடியுள்ளது. 1955–56ல் மாநிலத்தின் மொத்தச் சாகுபடியில் 17.9 சதவிகிதம் தஞ்சை மாவட்டத்தில் விளைந்துள்ளது. 1960–61ல் இது 25 சதவிகிதமாக அதிகரித்தது.

## அட்டவணை 2

| ஆண்டு | சராசரி ஏக்கருக்கு அரிசி விளைச்சல் | மொத்த உற்பத்தி லட்சம் டன்கள் |
|---|---|---|
| 1955—56 | 1,016 பவுண்டு | 6·12 |
| 1960—61 | 1,311 ,, | 8·87 |
| 1964—65 | 1,565 ,, | 10·39 |

## வாணிபப் பயிர்

தஞ்சை மாவட்டத்தின் வாணிபப் பயிர்களில் முக்கியமான கரும்பு விளைச்சலிலும் கணிசமான அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது. முதல் திட்ட முடிவில் 7,061 ஏக்கர்களில் கரும்பு சாகுபடி ஆயிற்று. இது இரண்டாவது திட்ட முடிவில் 9,274 ஏக்கர் களாகவும், மூன்றுவது திட்டத்தின் நான்காவது ஆண்டில் (1964–65) 9,959 ஏக்கர்களாகவும் அதிகரித்தது.

தஞ்சாவூர் மாவட்டத்தில் உணவுப் பொருள்கள் பயிராகும் பரப்பளவு தனித்தனியே கொடுக்கப்பெற்றுள்ளது:

### அட்டவணை 3

| | |
|---|---|
| நெல் முதல் போகம் (குறுவை + சம்பா + ஊடு) | 12.6 லட்சம் ஏக்கர் |
| நெல் இரண்டாம் போகம் | 2.26 ,, ,, |
| நெல் மூன்றும் போகம் | 1,213 ஏக்கர் |
| சோளம் | 4,690 ,, |
| கம்பு | 2,748 ,, |
| ராகி | 9,450 ,, |
| கேழ்வரகு | 2,756 ,, |
| இதர தானியங்கள் | 47,327 ,, |
| பயறு வகைகள் | 1.16 லட்சம் ஏக்கர் |

## ஏடிடி-27

கடந்த பதினைந்து ஆண்டுகளில் உற்பத்தி பெருகியதற்குக் காரணம் ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்பட்ட விவசாய அபிவிருத்திப் பணிகளாகும். இவை பலவகைப்படும். திட்டத்தில் சேர்ந்த பணிகள் 46; திட்டத்தில் சேராத பணிகள்

39. இவையல்லாமல் மத்திய அரசாங்க நிதி உதவியுடன் நடைபெறும் பணிகளும் உள்ளன.

தரமான விதைகளால் விளைச்சலை அதிகப்படுத்த முடியும் என்பது கண்கூடு. கடந்த மூன்று திட்டக் காலங்களில் தரமான விதைகள் சீரான முறையில் விநியோகிக்கப்பட்டன. ஆடுதுறையில் உள்ள பிராந்திய ஆராய்ச்சி நிலையம் கடந்த பதினைந்து ஆண்டுகளில் பல உயர்ரக நெல் விதைகளை உருவாக்கியது. இவைகளில் ஒன்றுதான் ஏடிடி–27. (ஆடுதுறை 27) அதாவது இந்த ஆராய்ச்சி நிலையமானது பலவகைப்பட்ட நெல் விதைகளைக் கலந்து இதுவரை 28 வகையான உயர்ரக நெல் விதைகளை உருவாக்கியது. இதில் இருபத்தேழாவதாக உருவாக்கப்பட்ட நெல் விதை அதிகமான மகசூலைத் தருகிறது. இந்த விதை இந்தியாவிலேயே மிகச் சிறந்ததென்று கூறலாம். இதல்லாமல் தலைஞாயிறிலும், பேராவூரணியிலும் இரண்டு ஆராய்ச்சி நிலையங்கள் நிறுவப்பட்டன.

திருவாரூர் விவசாயக்
கருவித் தொழிற்சாலையில்



இவ்விதைகளைக் கொண்டு அதிக அளவில் நெல் விதைகளை உருவாக்கி விநியோகிப்பதற்காக 13 விதைப் பண்ணைகள் ஆரம்பிக்கப்பட்டன. இப்பண்ணைகளில் உருவான விதைகள் தஞ்சை மாவட்டத்தில் மட்டுமல்லாது, தமிழ் நாடெங்கும் விநியோகிக்கப்பட்டன.

ஆடுதுறையில் வாழை ஆராய்ச்சி நிலையம் ஒன்றும், வேப்பங்குளத்தில் தென்னை ஆராய்ச்சி நிலையம் ஒன்றும் தொடங்கப்பட்டது. தமிழ் நாட்டில் இத்தகைய ஆராய்ச்சி நிலையங்கள் வேறு எங்கும் இல்லை. தமிழ் நாட்டின் மொத்தத் தேவைப் பாட்டினையும் இவ்விரு நிலையங்கள் பூர்த்தி செய்கின்றன.

### ரசாயன உரம்

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ரசாயன உரங்களை உபயோகிப்பதில் நல்ல அபிவிருத்தி ஏற்பட்டது. இரண்டாவது திட்ட முடிவில் 5,660 டன் அம்மோனியம் சல்பேட் பயன்படுத்தப்பட்டது. மூன்றாவது திட்ட முடிவில் இந்த அளவு 64.037 டன்களாக உயர்ந்தது. அதாவது பதினொரு மடங்கு அதிகம். இதேபோல் சூபர்பாஸ்பேட் அளவானது 1960–61ல் 8,932 டன்களிலிருந்து, 1964–65ல் 45,562 டன்களாக அதிகரித்தது. சுருங்கக்கூறினால், மூன்றாவது திட்டக் காலத்தில் சராசரி ஏக்கருக்குப் பயன்படுத்தப்பட்ட ரசாயன உர அளவானது இரண்டாவது திட்டக் காலத்தில் உபயோகிக்கப்பட்ட அளவை விட நான்கு மடங்கு அதிகமாகும்.

### தீவிரச் சாகுபடித் திட்டம்

திட்டக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட வேளாண்மை அபிவிருத்திப் பணிகளில் மிகவும் முக்கியமானது தீவிரச் சாகுபடித் திட்டம் ஆகும். இத்திட்டம் அமெரிக்காவைச் சேர்ந்த போர்டு நிறுவனக் குழுவினர் (Ford Foundation) செய்த சிபாரிசுகளின் அடிப்படையில் வகுக்கப்பட்டுள்ளது. குறிப்பிட்ட பகுதிகளில் பரீட்சார்த்த முறையில் சாகுபடி நடவடிக்கைகளைத்

தீவிரப்படுத்துவதே இத்திட்டத்தின் நோக்கமாகும். இது முதலில் தஞ்சாவூர் மாவட்டத்திலேயே தொடங்கப்பட்டது.

பண்ணைகளை அபிவிருத்தி செய்தல், தரமான விதைகளையும், கருவிகளையும் பயன்படுத்துதல், போதிய அளவு உரங்களை வழங்குதல், உரிய காலத்தில் பயிர்ப் பாதுகாப்புப் பணிகளை மேற்கொள்ளுதல், விவசாயிகளுக்கு அத்தியாவசியமான நிதி வசதிகளை உடனுக்குடன் கடன் வடிவிலும், மான்யமாகவும் தருதல் ஆகியவை மூலம் சாகுபடி முறைகளைத் தீவிரப்படுத்தி உற்பத்தியைப் பெருக்க வழிவகை செய்யப்பட்டது.

அட்டவணை 4

| ஆண்டு | பயிர்ப்பாதுகாப்பு செய்யப் பட்ட பரப்பளவு | உபயோகிக்கப்பட்ட மருந்து அளவு |
|---|---|---|
| 1960—61 | 29,300 ஏக்கர் | 270 டன்கள் |
| 1964—65 | 5 லட்சம் ஏக்கர் | 2,675 ,, |

1960ல் தஞ்சை மாவட்டத்தில் உள்ள 36 சமுதாய நல வட்டாரங்களுள் 23 வட்டாரங்களில் இத்திட்டம் அமுல் நடத்தப்பட்டது. முதல் முயற்சியாக நெல் விளையும் பரப்பளவில் 20 சதவிகிதம் பரப்பளவு இத்திட்டத்தின்கீழ் கொண்டுவரப்பட்டது. பின்னர் படிப்படியாக விஸ்தரிக்கப்பட்டது. மூன்றாவது திட்டக் காலத்தில் 26 வட்டாரங்கள் முழுவதிலும், எஞ்சிய 10 வட்டாரங்களில் பெரும்பாலான பகுதிகளிலும் இத்திட்டம் அமுலுக்கு வந்துவிட்டது.

இத்திட்டத்தின் மிக முக்கியமான அம்சம் விவசாயிகளுக்குத் தாராளமாகக் கடனுதவி செய்வதாகும். அப்போது தான் அவர்கள் பொருளாதார நெருக்கடியில்லாமல் உற்சாகமாகப் பணியாற்றுவார்கள். 1960–61ம் ஆண்டில் இத்திட்டம் அமுலில் உள்ள பகுதிகளைச் சேர்ந்த விவசாயிகளுக்குக் குறைந்த

காலக் கடனுக ரூபாய் 14.82 லட்சம் தரப்பட்டது. 1965-66ல் இந்தத் தொகை ரூபாய் 118.59 லட்சமாகும்.

## நெல் குவிகிறது

தஞ்சாவூர் மாவட்டத்தில் 1964ம் ஆண்டில் இத்திட்டம் அமுலில் இல்லாத பகுதிகளில் குறுவைச் சாகுபடியானது சராசரி ஏக்கருக்கு 2,343 பவுண்டுகளாகும். ஆனல் இத்திட்டம் அமுலில் உள்ள பகுதிகளில் சராசரி ஏக்கருக்குக் குறுவைச் சாகுபடி 4,300 பவுண்டுகள் ஆகும். ஏறக்குறைய 2,000 பவுண்டுகள் அதிகம். இந்த ஆண்டில் 200 ஏக்கர்களில்தான் இது செய்முறைப் பரீட்சார்த்தத் திட்டமாக மேற்கொள்ளப் பட்டது. ஆனல் 1965ம் ஆண்டில் 5,000 ஏக்கர்களில் இது மேற் கொள்ளப்பட்டது. சராசரி ஏக்கருக்குக் குறுவைச் சாகுபடி 3,857 பவுண்டுகள். இந்தியாவில் வேறு எங்கும் இவ்வளவு விளைச்சல் இல்லை. இதிலிருந்து இத்திட்டத்தின் அருமையை அறியலாம்.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் – அதாவது 1962 நவம்பர் மாதத்தில் – திருவாரூரில் விவசாயக் கருவித் தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கப்பட்டது.

தானியக் கிடங்கு—மன்னார்குடி



இதுவரை 21,786 நவீன முறைக் கலப்பைகள், 2,500 பர்மீயக் கருவிகள், 2,100 ரோட்டரி கருவிகள், 7,400 மருந்து தெளிக்கும் கருவிகள் விவசாயிகளுக்கு விநியோகிக்கப் பட்டுள்ளன.

## சிறந்த சாதனை

அரசாங்கம் அளித்த உதவிகளின் பயனாக மாவட்டத்தின் உணவு உற்பத்தி கணிசமாகப் பெருகியது. நெல் சாகுபடி ஒன்றே இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

### அட்டவணை 5

| | |
|---|---|
| 1950—51ல் சராசரி ஏக்கருக்கு நெல் விளைச்சல் | 1,530 பவுண்டு |
| 1964—65ல் சராசரி ஏக்கருக்கு நெல் விளைச்சல் | 2,348 ,, |
| சராசரி ஏக்கருக்குக் கூடுதல் | 818 ,, |
| மொத்தம் உள்ள 14.87 லட்சம் ஏக்கர்களில் கூடுதல் உற்பத்தி | 5.43 லட்சம் டன்கள் |
| ஒரு டன்னுக்கு ரூ. 420 வீதம் இதன் மதிப்பு | ரூ. 22.81 கோடி |

தஞ்சை மாவட்ட விவசாயிகள் 1964–65ம் ஆண்டில் மட்டும் ரூபாய் 22.81 கோடி மதிப்புள்ள 5.43 லட்சம் டன் நெல் அதிகமாக உற்பத்தி செய்துள்ளார்கள். 1950–51ல் தமிழ்நாடு முழுவதிலும் நில வருவாய் மற்றும் பாசன வருவாய் ஆகியவற்றின் மூலம் கிடைத்த மொத்த வருமானத்தை விட மேற்சொன்ன தொகை இரண்டு மடங்கு அதிகமாகும்.

குழந்தைகள் முதல் பெரியவர் வரை, நோயாளிகள் முதல் உடல் நலமுள்ளோர் வரை அனைவரும் சாப்பிடத் தகுந்தது பால். அதைத் தருவது பசு. விவசாயிகளுக்கு உற்ற தோழனாய் இருந்து வேளாண்மைக்கு உதவுவது காளை. உண்ணும் பொருள்

# கால்நடைச் செல்வம்



களில் ஒன்றாகிய இறைச்சியையும், முட்டைகளையும் தருபவை ஆடும், கோழியும். இவையெல்லாம் "கால்நடைச்செல்வங்கள்" ஆகும்.

பால், இறைச்சி, முட்டை ஆகியவை சத்துள்ள உணவுப் பொருள்களாகும். இவை நிறைய அளவில் கிடைப்பதற்கு கால் நடைகளைப் பெருக்குவதோடு, அவற்றின் தரங்களையும் அபி விருத்தி செய்யவேண்டும்.

தனி நபர்களுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் சொந்தமான கால்நடைகளை இனவிருத்தி செய்வதற்காக தஞ்சை மாவட்

டத்தில் இரண்டாவது, மூன்றுவது திட்டக் காலங்களில் உம்பளச்சேரி, காங்கயம், சிந்தி காளைகள் வழங்கப்பட்டன. இக் காளைகளை நல்ல முறையில் பராமரிப்பதற்காக ஆண்டுதோறும் நிதி உதவியும் தரப்பட்டது. இதற்கு பிரிமியம் திட்டம் என்று பெயர். இரண்டாவது, மூன்றுவது திட்டக் காலங்களில் 430 காளைகள் வழங்கப்பட்டன.

கால்நடைகளை செயற்கை முறையில் சினைப்படுத்தச் செய்வது ஒரு நவீன முறை. தஞ்சை மாவட்டத்தில் 3 செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யும் நிலையங்கள் உள்ளன. கடந்த பதினைந்து ஆண்டுகளில் 1,00,540 கால்நடைகள் செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யப்பெற்றன. சுமார் 18,680 உயர் ரகக் கன்றுகள் பிறந்தன.

அட்டவணை 6

| | முதல் திட்டம் | இரண்டாவது திட்டம் | மூன்றும் திட்டம் |
|---|---|---|---|
| செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யப் பெற்ற கால்நடைகள் | 1,868 | 45,566 | 53,097 |
| பிறந்த கன்றுகள் | 132 | 3,548 | 14,933 |

## கேந்திரக் கிராமத் திட்டம்

கால்நடைகள் பெருவாரியாக உள்ள கிராமத்தைத் தேர்ந்தெடுத்து, அங்கு கால்நடை அபிவிருத்தி நிலையம் அமைத்து, அந்நிலையத்தை மையமாகக் கொண்டு அதைச் சுற்றியுள்ள கிராமங்களின் கால்நடைகளை அபிவிருத்தி செய்வதற்கான திட்டமே கேந்திரக் கிராமத்

திட்டம். தஞ்சாவூரிலும், நன்னிலத்திலும் இருந்த செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யும் நிலையங்கள், மூன்றுவது திட்டக் காலத்தில் கேந்திரக் கிராம நிலையங்களாக மாற்றப் பட்டன. ஒவ்வொரு கேந்திரக் கிராம நிலையத்துக்கும் ஒன்பது கிளை நிலையங்கள் உள்ளன. கேந்திரக் கிராம நிலையம் ஒவ்வொன்றி லும் கால்நடை இன விருத்தி செய்வதற்கான நோக்கத்துடன் 16 உயர் ரகப் பொலி காளைகள் வளர்க்கப்படுகின்றன.

கால்நடைகளுக்குத் தேவையான தீவன வளர்ப்புக்காகவும் தனி நபர்களுக்கு நிதி உதவி செய்யப்பெற்றது. சுமார் 3 லட்சம் விதைகள் விநியோகிக்கப்பட்டதுடன், அங்கங்கே செய்முறைப் பயிற்சியும் செய்து காட்டப்பட்டது.

இம்மாவட்டத்தில் கேந்திரக் கிராமத் திட்டம் மட்டுமல் லாது, கேந்திரக் கிராம விஸ்தரிப்புத் திட்டமும் அமுலில் உள்ளது. தேவனூரர், வலிவலம், ஆலத்தம்பாடி, தலைஞாயிறு ஆகிய நான்கு இடங்களில் விஸ்தரிப்பு நிலையங்கள் உள்ளன. கேந்திரக் கிராம விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் இரண்டாவது

ஒரத்தநாடு கால்நடைப் பண்ணை



மூன்ருவது திட்டக்காலத்தில் 172 உயர் ரகப் பொலி காளைகள் வழங்கப்பட்டன. சுமார் 28,000 கால்நடைகளுக்குச் செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யப் பெற்றதன் பயனுக சுமார் 9,800 உயர் ரகக் கன்றுகள் பிறந்தன. செலவு ரூபாய் 3.8 லட்சம்.

## கோழி வளர்ப்பு

தற்போது பட்டுக்கோட்டை, அம்மாசத்திரம், காத்தாங்குடி, ஆலத்தம்பாடி, சாலியமங்கலம், ஆக்கூர், செங்கிப்பட்டி, பொறையாறு ஆகிய இடங்களில் கோழி வளர்ப்பு விஸ்தரிப்பு நிலையங்கள் உள்ளன.

இந்நிலையங்களின் வாயிலாகக் கோழி வளர்ப்பவர்களுக்குக் கடனுதவி வழங்கப்பெற்றது. மூன்ருவது திட்டக் காலத்தில் வழங்கப்பெற்ற தொகை ரூபாய் 1.5 லட்சம். கோழி வளர்ப்பவர்களிடமிருந்து நாட்டுச் சேவல்களையும், கோழிகளையும் பெற்றுக் கொண்டு அவைகளுக்கு மாற்ருக உயர் ஜாதி ரகங்கள் தரப் பட்டன. முட்டை பொறிக்கச் செய்யும் கருவிகள் குறைந்த விலையில் விற்கப்பட்டன.

## நோய்த் தடுப்பு

கால்நடைகளை நோய் நொடிகளிலிருந்து பாதுகாக்கவும், அவைகளுக்குத் தகுந்த சிகிச்சை அளிக்கவும் 5 கால்நடை மருத்துவ மனைகளும், 40 டிஸ்பென்சரிகளும் உள்ளன. இவையல்லாமல் ஊர் ஊராகச் சென்று சிகிச்சை அளிக்கும் பிரிவு ஒன்றும் உள்ளது. மூன்று திட்டக் காலங்களிலும் சேர்த்து 4.5 கால்நடைகளுக்கு வைத்தியம் பார்க்கப்பட்டதுடன், 1.6 லட்சம் கால்நடைகளுக்குக் காயடிக்கப்பட்டது. சுமார் 14.4 லட்சம் நோய்த் தடுப்பு ஊசிகள் போடப்பட்டன.

பால், இறைச்சி, முட்டை ஆகியவற்றைப் போல் மீனும் ஒரு சத்துள்ள உணவு. இம்மாவட்டத்தில் உள்நாட்டு மீன் வளமும், ஆழ்கடல் மீன் வளமும் உண்டு. எனவே இந்த மீன் வளத்தை

# மீன்வளம்



அபிவிருத்தி செய்வதற்காக மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் பல பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

மீன் குஞ்சுகளைச் சேகரித்து நீர்நிலைகளுக்கு வழங்குவது, மீன்களைப் பதப்படுத்துவதற்குத் தேவையான உப்பு வாங்குவதற்காகப் பொருளுதவி தருவது, கிராமங்களில் பயிற்சி முகாம் நடத்துவது, மீனவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான உதவிகளைச் செய்வது ஆகியவை இப்பணிகளில் அடங்கியவையாகும்.

மூன்றும் திட்டக்காலத்தில் தஞ்சை மாவட்டத்தின் நீர்நிலை களிலிருந்து சுமார் 9.6 கோடி மீன் குஞ்சுகள் சேகரிக்கப்பட்டு விநியோகிக்கப்பட்டன. முதல் திட்டக் காலத்தில் 3.7 கோடி மீன் குஞ்சுகளும், இரண்டாவது திட்டக் காலத்தில் 5.87 கோடி மீன் குஞ்சுகளும் சேகரிக்கப்பட்டு விநியோகிக்கப்பட்டன.

## மீன் எண்ணெய்

வாணகிரி, கிரிபுரக்கரை, முத்துப்பேட்டை, சேதுபாவ சத்திரம், ஆற்காட் துறை ஆகிய ஐந்து இடங்களிலும் மீன் பதப் படுத்தும் நிலையங்கள் உள்ளன. இந்நிலையங்களிலிருந்து சுமார் ரூபாய் 24,000 மதிப்புள்ள மீன் பதனிடப்பட்டு வெளியே அனுப் பப்பட்டதுடன், சுமார் ரூபாய் 20,000 மதிப்புள்ள உப்பு விநியோகிக்கப்பட்டது.

உடலுக்கு வலுவைத் தரும் மீன் எண்ணெய் தயாரிப்பதற் காக, கடற்கரையோரங்கள் நெடுக வசதியான இடங்களில் மீன் எண்ணெய் எடுக்கும் நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

குளிர்ப் பதன யந்திர நிலையம—தஞ்சாவூர்



மீன்களைப் பாதுகாப்பதற்கான குளிர் பதன யந்திர நிலையம் ஒன்று தஞ்சாவூரில் மூன்றுவது திட்டக் காலத்தில் நிறுவப்பட்டுள்ளது. முத்துப்பேட்டை, சேதுபாவசத்திரம், ஏரிப்புரக்கரை ஆகிய இடங்களிலும் இத்தகைய நிலையங்கள் நிறுவப்படுகின்றன. சீர்காழி வட்டம் திருமுல்லைவாசல் என்னுமிடத்தில் ஒரு நிலையம் நிறுவுவதற்கான திட்டம் இருக்கிறது.

## மீனவர்க்கு உதவி

மீனவர்களுக்கு வீடுகள் கட்டித் தரவும், நைலான் வலைகள் வழங்கவும், கடன் உதவி செய்யவும் பல திட்டங்கள் அமுலில் உள்ளன. மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டு, அவற்றைச் சேர்ந்த உறுப்பினர்களுக்கு இந்த உதவிகள் தரப்பட்டன.

53 கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மீனவர்களுக்கு நவீன முறைப் படகுகள் வழங்குவதற்காக, நாகைப்பட்டினத்தில் ஒரு படகு கட்டும் தளம் இருக்கிறது. இந்த நவீன முறைப் படகுகளைச் செலுத்தும் விதம் பற்றி மீனவர்களுக்கு இங்கேயே பயிற்சியும் தரப்படுகிறது. இரண்டாவது, மூன்றுவது திட்டக் காலங்களில் 261 மீனவர்களுக்குப் பயிற்சி தரப்பட்டது.

இயற்கை அளித்த செல்வங்களுள் பச்சை மரங்களும் ஒன்று. மரங்களும், புதர்களுமாய் மண்டிக்கிடக்கும் காடுகளால் நாம் எண்ணற்ற பயன் அடைகிறோம். கட்டிட வேலைகளுக்குத் தேவையான மரங்கள் காடுகளிலிருந்து கிடைக்கின்றன. மண்

# காடுகள்



அரிப்பையும், நிலச் சரிவையும் காடுகள் பெருமளவுக்குத் தடுத்து நிறுத்துகின்றன. அழகிய பறவைகளுக்கும், வனவிலங்குகளுக்கும் அவை புகலிடம் அளிக்கின்றன. ஆகவே இக்காடுகள் சீர்குலைந்து விடாதபடி பாதுகாக்கத் திட்டங்கள் வகுக்கப் பட்டுள்ளன. தஞ்சை மாவட்டத்தின் ஐந்தாண்டுத் திட்ட வேலைகளில் காட்டு வளம் இடம் பெற்றுள்ளது.

ஆறுகள், கால்வாய்கள், ஏரிகள் ஆகியவற்றின் கரைகளில் தேக்கு, மூங்கில் மற்றும் இதர மரங்களை வளர்க்கும் பணி இரண்

டாவது, மூன்றுவது திட்டங்களில் தீவிரமாக மேற்கொள்ளப் பட்டது. 1960–61லிருந்து 1964–65 வரை 90 ஏக்கர்களில் மூங்கில் வளர்க்கப்பட்டது.

காடுகளால் மற்றொரு நன்மையும் உண்டு. உதிர்ந்த இலைச் சருகுகள் நல்ல உரமாகப் பயன்படுகின்றன. 1958–59லிருந்து 1963–64 வரை. விவசாயிகளுக்குக் கோடைக்காடு பகுதியி லிருந்து இலைச் சருகுகள் தரப்பட்டன. இதன் வாயிலாக சுமார் ரூபாய் 5,500 வருமானம் கிடைத்தது.

## முந்திரி வளர்ப்பு

இம்மாவட்டத்தில் 1956லிருந்து முந்திரி வளர்க்கப்படு கிறது. இதுவரை 870 ஏக்கர்களில் முந்திரி வளர்ப்பு மேற் கொள்ளப்பட்டுள்ளது. பொது ஏலத்தின் மூலம் விற்பனை நடை பெறுகிறது. இதுபோல் காடுகளில் விளையும் வேறு பல பொருள்களும் ஏலத்தில் விற்கப்பட்டு, ரூபாய் 1.5 லட்சம் வருமானம் கிடைத்தது.

மூன்றுவது திட்டக் காலத்திலிருந்து அரக்கு மரங்களும், 1956–57லிருந்து சவுக்கு மரங்களும் வளர்க்கப்படுகின்றன. சுமார் 680 ஏக்கர்களில் சவுக்கு வளர்க்கப்படுகிறது. இதற்கான செலவு ரூபாய் ஒரு லட்சம். சவுக்கு மரங்களையும், இதர எரிபொருள் மரங்களையும் ஏலத்தில் விற்றதில் ரூபாய் 3.7 லட்சம் வருவாய் கிடைத்தது.

1956லிருந்து 1966 வரை 8,056 ஏக்கர்களுக்கும் மேலான பரப்பளவில் தேக்கு, யூகலிப்டஸ் மற்றும் இதர மரங்கள் வளர்க் கப்பெற்றன. இதற்கான செலவு ரூபாய் 12.32 லட்சம். 1963 விருந்து 1965 வரை மன்னார்குடி பிராந்தியத்தில் உள்ள மண மேல்குடி காடுகளில் 120 ஏக்கர்களுக்கும் அதிகமாக தென்னை வளர்க்கப்பெற்றது.

தொழில் வளர்ச்சிக்கும், வர்த்தக முன்னேற்றத்துக்கும் கூட்டுறவு முறை பெரிதும் உதவியாக இருக்கிறது. இந்தியாவிலேயே நம் மாநிலத்தில்தான் கூட்டுறவு இயக்கம் முதன் முதலில் தோன்றியது. 1904-ம் ஆண்டில் கூட்டுறவு பற்றிய சட்டம் அமுலா

# கூட்டுறவு



னது. பின்னர் 1905-ல் நமது மாநிலத்தில்தான் முதன்முதலாக, தலைமைக் கூட்டுறவு பாங்கு ஆரம்பிக்கப்பட்டது. அதுமட்டுமல்ல; கூட்டுறவு சம்பந்தமான பத்திரிகையும் முதன் முதலில் நம் மாநிலத்திலிருந்தே தான் வெளிவந்தது.

தமிழ்நாட்டிலேயே தஞ்சை மாவட்டத்தில்தான் அதிகமான கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. மூன்றுவது திட்ட முடிவில், கிராம மக்கள் தொகையில் 83 சதவிகிதம் கூட்டுறவு இயக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டுள்ளது. மாவட்டத்தில் உள்ள

36 வட்டாரங்களிலும் முழுக் கடன் உதவித் திட்டம் அமுலில் உள்ளது.

தஞ்சாவூர், கும்பகோணம் ஆகிய இரு இடங்களிலும் கூட்டுறவு மத்திய பாங்குகள் உள்ளன.

### அட்டவணை 7

| மத்திய பாங்குகள் | முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் | மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் |
|---|---|---|
| உறுப்பினர் எண்ணிக்கை | 1,223 | 2,120 |
| பங்கு மூலதனம் | 20·38 லட்சம் ரூபாய் | 78·45 லட்சம்ரூபாய் |
| வழங்கப்பட்ட கடன் | 85 95 ,, ,, | 167 46 ,, ,, |
| டெபாஸிட்டுகள் | 50 10 ,, ,, | 222·30 ,, ,, |
| ரிசர்வ் நிதி | 2·22 ,, ,, | 11·68 ,, ,, |

இவ்விரு பாங்குகளும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ரூபாய் 835.65 லட்சம் கடன் வழங்கியுள்ளன.

## கடன் வழங்கு சங்கங்கள்

இம்மாவட்டத்தில் பலவேறு வகைப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் இருக்கின்றன. இவற்றின் எண்ணிக்கை 1,954. இவற்றில் 1,323 சங்கங்கள் ஆரம்ப விவசாயக் கடன் வழங்கு சங்கங்கள் ஆகும். இவையல்லாமல் 3 கிராமப்புற பாங்குகள், 30 விவசாய பாங்குகள், 18 கடன் வழங்கு யூனியன்கள், 38 கடன் வழங்கு யூனியன் இணைப்பு நிறுவனங்கள் உள்ளன.

முதல் திட்ட ஆரம்பத்தில் விவசாய பாங்குகள், கிராமப்புற பாங்குகள் உள்பட 710 விவசாயக் கடன்வழங்கு சங்கங்கள் இருந்தன. தற்போது இருப்பவை 1,412.

நில அடமான பாங்குகளின் எண்ணிக்கையும் இந்தப் பதினைந்து ஆண்டுக் காலத்தில் அதிகரித்துள்ளது.

### அட்டவணை 8

| | முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் | மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் |
|---|---|---|
| நில அடமான பாங்குகளின் எண்ணிக்கை | 9 | 12 |
| உறுப்பினர்கள் எண்ணிக்கை | 3,470 | 8,850 |
| பங்கு மூலதனம் | 1·35 லட்சம் ரூபாய் | 4·38 லட்சம் ரூபாய் |

இந்த பாங்குகள் கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும் ரூபாய் 167.47 லட்சம் கடன் வழங்கியுள்ளன.

### கூட்டுறவுப் பண்ணை

துண்டு துண்டாகச் சிதறிக் கிடக்கும் நிலங்களை ஒன்று சேர்த்து, அவற்றிலிருந்து உற்பத்தியை அதிகரிப்பதற்காகக் கூட்டுறவுப் பண்ணைகள் ஆரம்பிக்கப்பட்டன. முதல் திட்ட ஆரம்பத்தில் 31 கூட்டுறவுப் பண்ணைகள் இருந்தன. மூன்றுவது திட்டத்தின் முடிவில் இந்த எண்ணிக்கை 120 ஆக உயர்ந்தது. இவற்றில் உள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கை 4,792. பங்கு மூலதனம் 1.52 லட்சம் ரூபாய்.

இப்பண்ணைகளில் உற்பத்தியான பொருள்களின் விற்பனையிலிருந்து கிடைத்த தொகை 30.39 லட்சம் ரூபாய். இப்பண்ணைகளுக்குச் சொந்தமாகவும், குத்தகையாகவும் உள்ள நிலம் 11,043 ஏக்கர்கள். இப்பண்ணைகளுக்கு அரசாங்கம் ரூபாய் 5.24 லட்சம் கடனுகவும், ரூபாய் 6.14 லட்சம் உதவித் தொகையாகவும் கொடுத்துள்ளது.

சிறு சிறு வர்த்தகர்களுக்கும், குறிப்பிட்ட அளவு ஊதியம் உள்ளவர்களுக்கும் கடன் கொடுத்து உதவுவதற்காக அர்பன் பாங்கு போன்ற சங்கங்களும் உள்ளன. முதல் திட்ட ஆரம்பத்தில் 34 சங்கங்கள் இருந்தன. மூன்ருவது திட்ட முடிவில் இருந்த சங்கங்களின் எண்ணிக்கை 87.

## தானியக் கிடங்குகள்

1960 மார்ச் மாதத்தில் கூட்டுறவு முறையின்கீழ் 29 தானியக் கிடங்குகள் இருந்தன. அதற்குப் பிறகு, தீவிர சாகுபடித் திட்டத்தின் பயனுக 318 கிடங்குகள் புதிதாகக் கட்டப்பட்டன. தற்போது மொத்தம் 347 கிடங்குகள் உள்ளன. இவற்றின் கொள்ளளவு 21,091 டன்களாகும். விவசாயிகள் இக்கிடங்குகளில் தங்கள் உணவுப் பொருள்களைப் பாதுகாத்து வைப்பதோடு அவைகளின்பேரில் கடனும் வாங்கிக்கொள்கின்றனர். இந்த ரீதியில் மூன்று திட்டக் காலங்களிலும் 161.91 லட்சம் ரூபாய் கடனுகை வழங்கப்பெற்றது. ரூபாய் 9.13 லட்சம் செலவில் 21 உர கிடங்குகள் கட்டப்படுகின்றன.



## கூட்டுறவு விற்பனை

தற்போது இரண்டு மாவட்டக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும், 16 ஆரம்ப விற்பனைச் சங்கங்களும், மாவட்ட பருத்தி விற்பனைச் சங்கம் ஒன்றும் உள்ளன.

மாவட்டக் கூட்டுறவு விற்பனைச் சங்கமானது விவசாயிகளிடமிருந்து நெல் கொள்முதல் செய்து விற்பனை செய்கிறது. இந்த விற்பனையில் கிடைக்கும் லாபத்தில் பாதியை அந்தந்த விவசாயிகளுக்குக் கொடுப்பதென்று தற்போது தீர்மானிக்கப்பட்டுள்ளது.

1960–61–ல் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 11,809 ஆகும். செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் 3.49 லட்சம் ரூபாய். 1965–66–ல் உறுப்பினர்கள் எண்ணிக்கை 26,893 ஆகவும், செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் 11.92 லட்சம் ரூபாயாகவும் அதிகரித்துள்ளன. 1960–61–ல் விவசாயிகளிடமிருந்து 9.61 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 8,497 டன் நெல் கொள்முதல் செய்யப்பட்டது. 1965–66–ல் கொள்முதல் செய்யப்பட்ட அளவு 40,422 டன். இதன் மதிப்பு 133.95 லட்சம் ரூபாய்.



நவீன அரிசி மில்—திருவாரூர்

அரசாங்கமானது இக்கூட்டுறவு விற்பனைச் சங்கங்களில் ரூபாய் 6.82 லட்சம் முதலீடு செய்துள்ளது.

## நவீன அரிசி மில்

தஞ்சாவூர் கூட்டுறவு விற்பனை சம்மேளனமானது 36 லட்சம் ரூபாய் செலவில் திருவாரூரில் ஒரு நவீன அரிசி மில் நிறுவியுள்ளது. இங்கு நாளொன்றுக்கு சராசரி 1,500 மூட்டை நெல் அரைக்கலாம். அரசாங்கம் இதற்கு ரூபாய் 20.25 லட்சம் கடனுகவும், ரூபாய் 3.75 லட்சம் உதவித் தொகையாகவும் கொடுத்துள்ளது.

தற்போது இம்மாவட்டத்தில் 163 கூட்டுறவுக் கடைகளும், 66 கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்களும், 36 நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களும் உள்ளன.

தீவிர சாகுபடித் திட்டத்தின் கீழ் விவசாயிகளுக்குத் தேவையான கடனுதவியும், விற்பனை வசதிகளும், இதர வசதிகளும் உரிய காலத்தில் செய்து தரப்பட்டன. 1960–61–ல் 23 வட்டாரங்களில் மட்டுமே இத்திட்டம் அமுலில் இருந்தது. தற்போது மொத்தம் உள்ள 36 வட்டாரங்களிலும் அமுலுக்கு வந்து விட்டது.

1,750 கிராமங்கள் இத்திட்டத்தின் கீழ் வந்துள்ளன. விவசாயிகளுக்கு 6 கோடி ரூபாய் கடனுகத் தரப்பட்டுள்ளது.

## உர விநியோகம்

ரசாயன உரங்களை மொத்தமாக விநியோகிக்கும் பொறுப்பானது 1965 ஜனவரியிலிருந்து 15 ஆரம்பக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள், ஒரு கிராமப்புற பாங்கு, ஒரு விவசாய பாங்கு ஆகியவைகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இந்த உரங்களை மாவட்டமெங்கிலும் உள்ள 579 நிறுவனங்கள் சில்லரையாக விற்பனை செய்கின்றன. விவசாயி ஒருவருக்கு மூன்று மைல் சுற்றளவுக்குள் ரசாயன உரம் கிடைக்க வகை செய்யப்பட்டுள்ளது.

1960–61–ல் 82.28 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 23,004 டன் ரசாயன உரங்கள் விநியோகிக்கப்பட்டன. இதற்கு மாறாக 1965–66–ல் சுமார் 99 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 23,725 டன் மதிப்புள்ள ரசாயன உரங்கள் விநியோகிக்கப்பட்டன.

## பால் விநியோகம்

கூட்டுறவு அடிப்படையில் மக்களுக்குத் தேவையான நல்ல பால் வழங்கும் முயற்சி சிறந்த வெற்றி பெற்றிருக்கிறது. 202 சங்கங்கள் உள்ளன. இவை நாளொன்றுக்கு 25,000 லிட்டர்கள் உற்பத்தி செய்கின்றன.

பால் விற்பனையில் ஈடுபட்டுள்ள ஹரிஜனங்களின் நன்மைக்காக 9 கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. கறவை மாடுகள் வாங்குவதற்காக ஹரிஜனங்களுக்கு அரசாங்கம் கடன் கொடுத்து உதவுகிறது. இதேபோல் பெண்களுக்கென்று கூட்டுறவுச் சங்கங்களும் உள்ளன. இச்சங்கங்களுக்கும் அரசாங்கம் நிதி உதவி தருகிறது.

கடந்த மூன்று திட்டக் காலங்களிலும் அரசாங்கமானது பால் வழங்கு கூட்டுறவுச் சங்கங்களுக்கு 20.5 லட்சம் ரூபாய் கடனுகக் கொடுத்துள்ளது. தஞ்சாவூரிலும், கும்பகோணத்திலும் உள்ள கூட்டுறவு பாங்குகள் 9 லட்சம் ரூபாய் கடன் வழங்கியது.

தஞ்சாவூர் நகரிலுள்ள கூட்டுறவுப் பால் வழங்கு யூனியனுனது, பாலை பதப்படுத்தி வைப்பதற்கான நிலையம் ஒன்றை நிர்மாணித்து வருகிறது. மன்னார்குடியிலும் ஒரு நிலையம் நிறுவப்படுகிறது.

ஜனநாயக ஆட்சியின் அடித்தளமாக விளங்குவது பஞ்சாயத்து ஆட்சி. பஞ்சாயத்து நிர்வாகத்தில் கிராம மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் பங்கு கொள்கின்றனர். ஒரு பஞ்சாயத்தின் பரப்பளவும், மக்கள் தொகையும் குறிப்பிட்ட

# புது வாழ்வு



அளவுக்குள் இருப்பதால், மக்கள் எல்லோருமே அந்த நிர்வாகத்தில் பங்கேற்றுள்ளனர் என்று சொல்லலாம். எனவே உண்மையான மக்களாட்சி என்பது ஆரம்பக் கட்டத்தில் பஞ்சாயத்து ஆட்சியிலிருந்தே மலருகிறது.

1958-ம் ஆண்டின் தமிழ்நாடு பஞ்சாயத்துச் சட்டத்தின் படி, தஞ்சை மாவட்டம் முழுவதிலும் பஞ்சாயத்து ஆட்சி அமுலுக்கு வந்தது. இம்மாவட்டத்தில் 1,625 பஞ்சாயத்துக்கள் உள்ளன. இவை 36 பஞ்சாயத்து யூனியன்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

ஒரு வட்டாரத்தின் அபிவிருத்திப் பொறுப்புகள் அந்தந்தப் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்ததாகும். விவசாயம், கால்நடை, மீன்வளம் மற்றும் கிராமத் தொழில்கள் அபிவிருத்தி, ஆரம்பக் கல்வி, கிராமப்புற சுகாதாரம், இதர சமுதாய நலத் திட்டங்கள் அனைத்தையும் பஞ்சாயத்து யூனியனே கவனிக்க வேண்டும். இதற்குத் தேவையான நிதி ஆதாரங்கள் வரி விதிப்பதன் மூலமும், அரசாங்கம் தருகிற ஈட்டு மான்யங்கள் மூலமும் திரட்டப்படுகின்றன.

## அரசாங்க உதவி

ஆரம்பக் கல்வித் திட்டங்களை அமுல் நடத்துவதற்காகும் செலவில் அரசாங்கமும் ஒரு பகுதி தருகிறது. பள்ளி உணவுத் திட்ட மான்யம், சமூகக் கல்வி மான்யம், தாய்சேய் நல மான்யம், கிராமத் தொழில் மான்யம், தல பாசன மான்யம், விவசாய மான்யம், தொழில் திட்ட நடவடிக்கை மான்யம், தல சாலை மான்யம் என்று பலவகைப்பட்ட மான்யங்களை அரசாங்கம் தருகிறது.

இவ்வாறு, வரி விதிப்பது, அரசாங்கம் மான்யம் தருவது ஆகிய அம்சங்களிலிருந்து இம்மாவட்டத்திலுள்ள பஞ்சாயத்து யூனியன்களுக்கு ஆண்டொன்றுக்கு ரூபாய் 280 லட்சம் வருவாய் வருகிறது.

## விவசாயம்

ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனும் தனக்கென ஒரு விவசாய உற்பத்தித் திட்டத்தை வகுத்துக்கொள்கிறது. அந்த வட்டாரம் முழுவதற்கும் இத்திட்டம்தான் அடிப்படையாக இருக்கும். மரம் வளர்ப்பதிலும் பஞ்சாயத்துக்கள் அதிகக் கவனம் செலுத்துகின்றன. மூன்றாவது திட்டக் காலத்தில் 1.83 லட்சம் தென்னைகள் நடப்பட்டன. பசுந்தழை உரம், கம்போஸ்ட் உரம் ஆகியவற்றை உற்பத்தி செய்து விநியோகிப்பதிலும் பஞ்சாயத்துக்கள் ஈடுபட்டன. நவீன விவசாயக் கருவிகள், உயர்ரக விதைகள், மருந்து வகைகள் ஆகியவற்றைக் குறைந்த விலையில் விநியோகித்தன.



கால்நடை மருத்துவ மனை - செம்பனூர் கோவில்

கிராமங்களிலுள்ள கால்நடைகளைத் தர விருத்தி செய்வதில் பஞ்சாயத்துக்கள் முனைப்போடு செயலாற்றின. மாதிரிக் கோழிப் பண்ணைகள் வைத்து நடத்தி, கோழி வளர்ப்பவர்களுக்கு உதவி புரிந்தன. அரசாங்க உதவியோடு கால்நடை டிஸ்பென்ஸரிகளை யும், செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யும் நிலையங்களையும் நிறுவின.

## அட்டவணை 9

| | | |
|---|---|---|
| பஞ்சாயத்துக்களால் தொடங்கப்பெற்ற கால்நடை டிஸ்பென்ஸரிகள் | — | 30 |
| செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யும் நிலையங்கள் | — | 12 |
| வழங்கப் பெற்ற பொலிகாளைகள் | — | 650 |
| உயர்ஜாதி ஆடுகள் | — | 1,408 |
| சேவல்கள் | — | 24,244 |
| நிறுவப்பட்ட கோழிப் பண்ணைகள் | — | 371 |

மீன் வளர்ப்பில் பஞ்சாயத்துக்கள் தனி அக்கறை காட்டின. 113 பஞ்சாயத்துக்களில் மீன் பண்ணைகள் ஆரம்பிக்கப்பட்டன. மீன் வளர்ப்புக்காக 225 ஏரி, குளங்களைச் செப்பனிட்டன. மீனள அபிவிருத்திக்காகத் திட்டக் காலத்தில் பஞ்சாயத்து யூனியன்கள் மற்றும் பஞ்சாயத்துக்களால் செலவிடப்பட்ட தொகை ரூபாய் 4.47 லட்சம் ஆகும்.

**கல்வி**

தொடக்கக் கல்வியை அபிவிருத்தி செய்யும் முழுப் பொறுப்பும் பஞ்சாயத்து யூனியன்களுடையது. மூன்றுவது திட்ட காலத்தில் இத்துறையில் மிகச் சிறந்த முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. மூன்றுவது திட்டக் கால முடிவில் பஞ்சாயத்து யூனியன்களின் நிர்வாகத்தின் கீழ் 2,367 தொடக்கப் பள்ளிகள் இருந்தன. இப்பள்ளிகளில் பயிலும் மாணவர்களுக்கு இலவச நண்பகல் உணவு தரப்பட்டது. தொடக்கப் பள்ளிகளுக்கான கட்டிடங்கள் கட்டுவதற்காக பஞ்சாயத்து யூனியன்கள் மூன்றுவது திட்டக் காலத்தில் 33 லட்சம் ரூபாய் செலவு செய்தன. நான்காவது திட்ட முடிவுக்குள் எல்லா

கடப்பு வழி-மகாராஜ சமுத்திரம்



தொடக்கப் பள்ளிகளுக்கும் நல்ல கட்டிடங்கள் கட்டித் தர வேண்டும் என்ற திட்டத்தோடு வேலைகள் நடைபெறுகின்றன.

கிராம மக்கள் ஒன்றுகக் கூடி தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளவும், பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வழிவகைகளைக் காணவும் ஏதுவாக இளைஞர் சங்கங்களும், சமூகக் கல்வி நிலையங்களும் ஏற்படுத்தப்பட்டன. எல்லாப் பஞ்சாயத்துக்களிலும் வானொலி மன்றங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. 1,461 சமூகக் கல்வி நிலையங்களும், 192 குழந்தைகள் பூங்காக்களும், 515 இளைஞர் சங்கங்களும் ஆரம்பிக்கப்பெற்றன.

தாய் சேய் நல அபிவிருத்தியிலும் பஞ்சாயத்துக்கள் உரிய கவனம் செலுத்தின. 10,000 மக்கள் தொகைக்கு ஒரு தாய் சேய் நல நிலையம் என்ற அடிப்படையில் பல நிலையங்கள் நிறுவப்பட்டன. சுமார் 1,500 மாதர் சங்கங்கள் அமைக்கப்பட்டு, தொழில் வளர்ச்சிக்கான கருவிகளும் விநியோகிக்கப்பட்டன.

## கிராம அபிவிருத்தி

கிராமங்களில் போக்குவரத்து மற்றும் குடி தண்ணீர் வசதி ஏற்படுத்துவதற்காக மூன்றுவது திட்டக் காலத்தில் ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனுக்கும் ரூபாய் 3.4 லட்சம் மான்யமாகத் தரப்பட்டது. எல்லாப் பஞ்சாயத்து யூனியன்களும் இத்தொகையை நல்ல முறையில் பயன்படுத்தி அபிவிருத்தி ஏற்படுத்தின. இவ்வகையில் மூன்றுவது திட்டக் காலத்தில் ஆன செலவு ரூபாய் 126 லட்சம். 1,043 மைல் நீளச் சாலைகள் போடப்பட்டன. 1,370 சிறு பாலங்கள் கட்டப்பட்டன. 9,001 கிணறுகள் வெட்டப்பட்டன. 62 உயர் மட்டக் குடிநீர்த் தொட்டிகள் நிர்மாணிக்கப்பட்டன.

மாநிலக் கதர் மற்றும் கிராமத் தொழில்கள் குழுவின் உதவியுடன், பஞ்சாயத்து யூனியன்கள் பல கிராமத் தொழில் வளர்ச்சித் திட்டங்களை உருவாக்கிச் செயல்படுத்தின. இதற்காக மேற்படி போர்டானது மூன்றும் திட்டக் காலத்தில் ஒவ்வொரு

வட்டாரத்துக்கும் 50 ஆயிரம் ரூபாய் மான்யம் வழங்கியது. தற்போது இம்மாவட்டத்தில் உள்ள வட்டாரங்களில்

| | |
|---|---|
| தச்சு வேலை—கொல்லு வேலைப் பிரிவுகள் | 35 |
| தையல் பிரிவுகள் | 29 |
| தோல் பதனிடுவதற்கான பிரிவுகள் | 3 |
| மண்பாண்டத் தொழில் பிரிவுகள் | 14 |
| செங்கல் தயாரிக்கும் பிரிவுகள் | 14 |
| சோப்பு தயாரிக்கும் பிரிவுகள் | 3 |
| சுண்ணும்புக் காளவாய்கள் | 3 |

உள்ளன. எல்லா வட்டாரங்களிலும் தேனீ வளர்ப்பு மேற்கொள்ளப்பட்டது.

விவசாயிகளுக்குத் தேவையான கடன்களை உரிய காலத்தில் கொடுத்து உதவுவதற்காகப் பல கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. இச்சங்கங்கள் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் விவசாயிகளுக்கு 591 லட்சம் ரூபாய் கடன் வழங்கின. இவையல்லாமல் விவசாயிகள் கிணறு வெட்டிக் கொள்ளவும், மின்சாரப் பம்ப் செட்டுகள் வைக்கவும், மாட்டுத் தொழுவங்கள் கட்டவும், கம்போஸ்ட் உரக் குழிகள் வெட்டவும் அரசாங்கமானது மூன்றும் திட்டக் காலத்தில் ரூபாய் 1.46 கோடி கடன் வழங்கியது.

பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன்களும் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தைத் திறம்படச் செயல்படுத்தின. 1961-ல் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொண்டவர்களின் எண்ணிக்கை 1,648. இது 1965ல் 22,066 ஆக அதிகரித்தது.

ஒரு நாட்டின் அடிப்படைப் பொருளாதாரத்தை உருவாக்குவது வேளாண்மை. இதிலிருந்து சமுதாயத்தின் பரவலான பொருளாதாரம் உருவாக்கப்படுகிறது. அவ்வாறு உருவாக்குபவை தொழில்கள். தொழில்கள் என்று சொல்லும்பொழுது

# தொழில் வளர்ச்சி



பெரிய, நடுத்தரத் தொழில்கள், சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் இடம்பெறுகின்றன.

நாடு விடுதலை அடைவதற்கு முன்பு நம் தமிழ்நாட்டில் இந்தத் தொழில்கள் அவ்வளவாக இல்லை. ஏனெனில் தொழில் வளர்ச்சியில் அன்னிய அரசாங்கம் விசேஷ அக்கறை ஏதும் காட்டவில்லை. சென்னை, மதுரை, கோவை போன்ற முக்கியமான நகரங்களில் மட்டும் சுமாரான தொழில் வசதிகள் செய்து தரப் பட்டன. மற்றபடி நாடெங்கும் அவைகளை விஸ்தரிப்பதற்கான

ஒரு சூழ்நிலையே தோன்றவில்லை. தனியார் ஆரம்பித்த தொழில்களுக்கு அன்னிய அரசாங்கம் மிகமிகக் குறைந்த அளவிலேயே தான் உதவிசெய்து வந்தது. அத்துடன் மின்சாரப் பற்றுக்குறை, மூலப் பொருள்களான நிலக்கரி, இரும்பு பற்றுக்குறை ஆகியவைகளும் இருந்தன. தொழில் வளர்ச்சிக்காகத் திட்டமிடப்பட்ட எவ்விதமான முயற்சியும் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

## தனியார் துறை

இந்த நிலையில் நாடு விடுதலை அடைந்தது. சுதந்திர அரசாங்கம் அமைந்தது. அதற்குப் பிறகு தொழில் துறையில் ஒரு புதுத் திருப்பம் தோன்றலாயிற்று. தொழில் கொள்கை வகுக்கப்பட்டது. ஆங்காங்கேயுள்ள இயற்கை வசதிகள் மற்றும் தொழில் ஆதாரங்கள் கணக்கெடுக்கப்பட்டன. அவைகளை எந்தெந்த முறைகளில் பயன்படுத்தலாம் என்று திட்டமிடப்பட்டது. இதன் பயனாக நாட்டின் தொழில் வளர்ச்சியில் ஒரு உத்வேகம் தோன்றியது. நம் தமிழ்நாடு தொழில் துறையில் முன்பு இருந்ததைவிடப் பல மடங்கு முன்னேற முடிந்தது.

பொதுத்துறை மட்டுமின்றி, தனியார் துறையும் பல தொழில்களை நிறுவியுள்ளது. அரசாங்கமானது தொழில்கள் வளர்வதற்கான ஒரு நல்ல வாய்ப்பினையும், சூழ்நிலையையும் உருவாக்கித் தந்ததோடு தொழிலதிபர்களுக்குத் தேவையான பல உதவிகளையும் தாராளமாகச் செய்ததால்தான், கடந்த பதினைந்து ஆண்டுக் காலத்தில் தனியார்துறை பல தொழில்களை நிறுவ முடிந்தது என்பதை மறந்துவிடக்கூடாது.

## பெருந் தொழில்கள்

கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும் தஞ்சை மாவட்டத்தில் தனியார் துறையின் கீழ் பல பெருந் தொழில்கள் நிறுவப்பட்டுள்ளன.

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வடபாதிமங்கலத்தில் திரு ஆரூரான் சர்க்கரை ஆலை நிறுவப்பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் கும்பகோணம் அபிவிருத்தி வட்டாரத்தைச் சேர்ந்த சோழமாளிகை கிராமத்தில் சுந்தரம் தீப்பெட்டித் தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டது. தஞ்சாவூர் பஞ்சாலையும், அறந்தாங்கியில் உள்ள நாடிமுத்து பஞ்சாலையும், வேதாரண்யத்தில் உள்ள மேட்டூர் மருந்துவகை உற்பத்தித் தொழிற்சாலையும், மேற்கிந்தியத் தீப்பெட்டித் தொழிற்சாலையும் மூன்றும் திட்டக் காலத்தில் நிறுவப்பட்ட பெருந் தொழில்களாகும்.

இவையல்லாமல் மணல்மேடு என்ற கிராமத்தில் கூட்டுறவு அடிப்படையில் தஞ்சை மாவட்டக் கூட்டுறவு நூற்பாலை ஆரம்பிக்கப்பட்டது.

கும்பகோணம் பித்தளைப்பொருள் உற்பத்திப் பிரிவில்



பட்டுக்கோட்டை வட்டத்தில் உள்ள நம்பிவயல் கிராமத்தில் தனியார் துறையினரால் ஒரு காகிதத் தொழிற்சாலை அமைக்கப்பட்டு வருகிறது.

நாகப்பட்டினத்தில் இரும்புக் கம்பிகள் மற்றும் இதர இரும்பு உபபொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்று உள்ளது.

## சிறு தொழில்கள்

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் தஞ்சை மாவட்டத்தில் சிறு தொழில்கள் என்னும் பிரிவின் கீழ் சுமார் 390 தொழிற் பிரிவுகள் பதிவு செய்யப்பட்டிருந்தன. இவற்றுள் முக்கியமான சில பிரிவுகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| இரும்பு, எஃகு உப பொருள் உற்பத்திப் பிரிவுகள் | 89 |
| இதர உலோக உப பொருள் உற்பத்திப் பிரிவுகள் | 61 |
| சிமெண்ட் ஜிப்ஸம் உப பொருள் உற்பத்திப் பிரிவுகள் | 28 |
| விவசாயக் கருவி உற்பத்திப் பிரிவுகள் | 22 |
| சுவை பானம் தயாரிப்புப் பிரிவுகள் | 34 |
| புகையிலைப் பொருள் தயாரிப்புப் பிரிவுகள் | 16 |
| மரச் சாமான் மற்றும் ஆசனங்கள் தயாரிப்புப் பிரிவுகள் | 14 |
| சோப்பு தயாரிக்கும் பிரிவுகள் | 15 |
| அச்சுத் தொழிற் பிரிவுகள் | 10 |
| மருந்து வகைகள் தயாரிக்கும் தொழிற் பிரிவுகள் | 7 |
| தீப்பெட்டி மற்றும் மத்தாப்பு உற்பத்தித் தொழிற் பிரிவுகள் | 7 |

## தொழிற் பேட்டை



இதோ! -படத்தில் இருக்கும் இவருக்கு இரண்டு கண்களும் தெரியாது. முழுக் குருடர். ஆனால் தமக்குள்ள தொழில் அநுபவத்தைக் கொண்டும் பழக்கத்தைக் கொண்டும் சைக்கிள் பாகங்களை இணைக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளார். இவருக்கு இந்த வாய்ப்பைத் தருவது தஞ்சாவூர் தொழிற் பேட்டையில் உள்ள அரசாங்க சைக்கிள் இணைப்புப் பிரிவு ஆகும்.

சுமார் 22 ஏக்கர் பரப்பளவில் ரூபாய் 6.46 லட்சம் செலவில் 6 தொழிற்சாலைப் பிரிவுகளுடன் இத்தொழிற்பேட்டை அமைக்கப்பட்டுள்ளது. இவற்றுள் அரசாங்கம் மூன்று பிரிவுகளில் சைக்கிள் இணைப்புப் பிரிவு, கருவி அறை, மாதிரி பவுண்டரி ஆகியவற்றை வைத்துள்ளது. எஞ்சிய மூன்று பிரிவுகளும் தனியார் துறைக்கு வாடகைக்கு விடப்பட்டுள்ளன.

கும்பகோணத்தில் பித்தளைப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற் பிரிவு, மன்னார்குடியில் தச்சு வேலை, கொல்லு வேலைத் தொழிற்சாலை, மாயவரத்தில் பல பணிகளுக்கும் உதவக்கூடிய இன்ஜினியரிங் தொழிற்சாலை ஆகியவற்றையும் அரசாங்கம் திட்டக் காலங்களில் நிறுவியது.

## கைவண்ணப் பொருள்கள்

கண்களைக் கவரும் கலையழகோடு விளங்கும் பல பொருள்கள் தஞ்சை மாவட்டத்தில் தயாரிக்கப்படுகின்றன. அவற்றுள் ஒன்று சுவாமிமலையில் தயாரிக்கப்படும் பித்தளை படிமங்கள். இந்தியா முழுவதிலும் புகழோடு விளங்கும் இந்தப் படிமங்களில் சில வெளிநாடுகளுக்கும் அனுப்பப்பட்டுள்ளன. இந்தக் கலையைப்

பராமரித்து வளர்க்கும் நோக்கத்துடன் அரசாங்கம் சுவாமி மலையில் ஒரு பயிற்சி நிலையத்தை நிறுவியது.

காகித பொம்மைகள் செய்வதிலும், சிற்பத் தட்டுகள் தயாரிப்பதிலும், நெட்டியைக்கொண்டு அழகிய கோபுர வடிவங்களை உருவாக்குவதிலும், கலம்காரி சித்திரம் வரைவதிலும் தஞ்சை மக்களின் கலை நயம் மிளிரும் கைவண்ணத்தைக் காணலாம். அக்கலைகளைப் பாதுகாத்து வளர்ப்பதற்காகவும் அரசாங்கம் தொழிற் பயிற்சி நிறுவனங்களை நடத்தி வருகிறது. இங்கு உருவாக்கப்படும் பொருள்களின் விற்பனைக்காக, அரசாங்கம் தஞ்சாவூரில் ஒரு விற்பனை நிலையத்தையும் அமைத்துள்ளது. மூன்றாவது திட்ட முடிவில் இந்நிலையம் ரூபாய் 8 லட்சம் மதிப்புள்ள பொருள்களை விற்பனை செய்துள்ளது.

### கடன் உதவி

சிறு தொழில்களின் வளர்ச்சிக்காக அரசாங்கம் சிறு தொழிலதிபர்களுக்குக் கடன் உதவி செய்ததுடன் கச்சாப் பொருள்கள், மற்றும் யந்திரங்கள் கொடுத்து உதவியது. மூன்று திட்டக் காலங்களிலும் 4,818 தொழிற் பிரிவுகளுக்கு சுமார் 13.2 லட்சம் ரூபாய் அரசாங்கத்தால் கடனாகத் தரப்பட்டுள்ளது.

## அட்டவணை 10

| ஆண்டு | உதவி பெற்ற தொழில்கள் எண்ணிக்கை | தரப்பட்ட தொகை | தொழில்கள் விவரம் |
|---|---|---|---|
| முதல் திட்டக் காலம் (1951-56) | 1 | ரூபாய் 500 | தச்சு வேலை கொல்லு வேலை மட்பாண்டத் தொழில் |
| இரண்டாவது திட்டக்காலம் (1956--61) | 351 | ரூ. 3·5 லட்சம் | கயிறு உற்பத்தி தொழில் |
| மூன்றாவது திட்டக் காலம் (1961-66) | 4,466 | ரூ. 9·7 லட்சம் | சிறு ரக இன்ஜினியரிங் சைக்கிள் தயாரிப்புத் தொழில் |

## தொழில் கூட்டுறவுச் சங்கம்

முதல் ஐந்தாண்டுத் திட்டத்துக்கு முன்பு இம்மாவட்டத்தில் மூன்று தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் இருந்தன. இவைகளுக்கு அரசாங்கம் கடனாக ரூபாய் 1.4 லட்சமும், மான்யமாக ரூபாய் 2.3 லட்சமும் கொடுத்தது.

அதற்குப் பிறகு கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும் 31 தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் அரசாங்க உதவியுடன் ஆரம்பிக்கப்பட்டன. இவைகளுக்குக் கடனாகத் தரப்பட்ட தொகை ரூபாய் 3.33 லட்சம்.

கயிறு தயாரிப்புத் தொழில், உலோகத் தொழில், தையல் வேலை, காகித பொம்மை தயாரிப்புத் தொழில், பாய் பின்னும் தொழில், தச்சு வேலை, கொல்லு வேலை ஆகிய தொழில்களின் வளர்ச்சிக்காகவே இக்கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. தற்போது இச்சங்கங்களில் 2,302 உறுப்பினர்கள் உள்ளனர்.

தங்கக் கட்டுப்பாட்டினால் பாதிக்கப்பட்ட தொழிலாளர்களில், 3,700 தொழிலாளர்களுக்கு அரசாங்கம் ரூபாய் 35.5 லட்சம் கடன் கொடுத்து அவர்களது புனர்வாழ்வுக்கான பணிகளைச் செய்துள்ளது.

## பயிற்சி நிறுவனங்கள்

தொழிற்சாலைகளுக்குத் தேவையான பயிற்சிபெற்ற தொழிலாளர்களை உருவாக்குவதற்காக தஞ்சையிலும், நாகையிலும் இரண்டு நிறுவனங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்விரு

கூட்டுறவு நூற்பு ஆலை-மணல் மேடு



நிலையங்களிலும் 13 தொழில்களில் 607 தொழிலாளர்களுக்குப் பயிற்சி தரமுடியும்.

தொழில் வளர்ச்சியை ஊக்குவிப்பதற்காக, சிறு தொழிலதிபர்கள் செலுத்தும் மின்சாரக் கட்டணத்தில் ஒரு பகுதியை அரசாங்கம் உதவி நிதியாகக் கொடுத்து உதவுகிறது. இத்திட்டம் 1962 ஏப்ரல் மாதத்திலிருந்து அமுலுக்கு வந்தது.

ஈச்சங்கோட்டையில் பட்டு அபிவிருத்திப் பண்ணை ஒன்று நிறுவப்பட்டுள்ளது. செங்கிப்பட்டியில் ஒரு பட்டு அபிவிருத்திப் பண்ணை நிறுவ உத்தேசிக்கப்பட்டுள்ளது.

## கிராமத் தொழில்கள்

தற்போது தஞ்சை மாவட்டத்தில் கிராமத் தொழில்களின் வளர்ச்சியை மாநிலக் கதர் மற்றும் கிராமத் தொழில் குழு நிர்வகித்துக் கண்காணிக்கிறது. பலவேறு வகைப்பட்ட கிராமத் தொழில்கள் கூட்டுறவு அடிப்படையில் வளர்ச்சி அடைகின்றன. தச்சு வேலை கொல்லு வேலை தொழில் வளர்ச்சிக்காக பஞ்சாயத்து யூனியன்களில் பயிற்சி நிலையங்களும், தோல் பதனிடும் தொழில் சம்பந்தமாக மாதிரி தோல் பதனிடும் நிலையம் ஒன்றும் உள்ளன. மற்ற தொழில்களுக்காகத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன.

| தொழில் | தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் |
|---|---|
| தேனீ வளர்ப்பு | 5 |
| மண்பாண்டத் தொழில் | 14 |
| செங்கல், ஓடு தயாரிக்கும் தொழில் | 14 |
| எண்ணெய் எடுக்கும் தொழில் | 22 |
| கைக்குத்தல் அரிசித் தொழில் | 8 |
| காகித உற்பத்தி | 1 |
| வெல்லம் உற்பத்தி | 87 |

## கதர்

கதர்த் தொழில் அபிவிருத்தித் திட்டம் 1959லிருந்து அமுலில் உள்ளது. இரண்டாவது திட்டக் காலத்தில் 390 கிராமங்களில் 15,600 குடும்பங்கள் கதர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தன. கதர்த் தொழிலால் இக் குடும்பங்களுக்கு தலா ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் 300 வருமானம் கிடைத்தது. மூன்றாவது திட்டக் காலத்தில், 1,190 கிராமங்களில், 47,600 குடும்பங்கள் கதர்த் தொழிலில் ஈடுபட்டு ஆண்டு ய்ஒன்றுக்குத் தலா 450 ரூபாய் வருமானம் பெற்று வந்தன.

தற்போது இம்மாவட்டத்தில் ஒரு மத்திய நிலையமும், 4 கிளை நிலையங்களும், ஒரு பட்டு உற்பத்தி நிலையமும், 19 விற்பனை நிலையங்களும், 3 பயிற்சி நிலையங்களும் உள்ளன. இவை இரண்டாவது, மூன்றாவது திட்டக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டவையாகும். இரண்டாவது திட்டக் காலத்தில் ரூபாய் 45,000 மதிப்புள்ள கதர்த் துணியும், மூன்றாவது திட்டக் காலத்தில் ரூபாய் 7.2 லட்சம் மதிப்புள்ள கதர்த் துணியும் உற்பத்தி செய்யப்பட்டன.

தற்போது 36 கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. 2,638 உறுப்பினர்கள் இருக்கின்றனர். இச்சங்கங்கள் மூன்றாவது திட்டக் காலத்தில் 72.83 லட்சம் ரூபாய் மதிப்புள்ள துணிகளை விற்பனை செய்தன.

வலிவலம் தேசிகர் பாலிடெக்னிக்—நாகை



முதலாவது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலங்களின்போது, தஞ்சை மாவட்டத்தின் மின்சாரத் தேவைப்பாடுகளைத் தென் சென்னை மின்சார விநியோகக் கார்ப்பொரேஷனும், கும்பகோணம் மின்சார விநியோகக் கார்ப்பொரேஷனும்

# மின்சாரம்



கொடுத்து வந்தன. மூன்றுவது திட்டக் காலத்தில் (1963–ம் ஆண்டில்) தஞ்சை மாவட்டத்தின் பெரும் பகுதி தமிழ்நாடு மின்சார போர்டின்கீழ் கொண்டு வரப்பட்டது. அதற்குப் பிறகு நிறைய கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப் பெற்றுள்ளது.

கோயில்வெண்ணி, ஒரத்தநாடு, திருவாரூர், திருத்துறைப்பூண்டி, பட்டுக்கோட்டை, ஆவுடையார்கோயிலில் உள்ள நாகுடி ஆகிய இடங்களில் மின்சாரக் கிளை நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

கிராமப்புறங்களுக்கு மின்சாரத்தை விஸ்தரிப்பதில் அகில இந்தியாவிலும் தமிழ்நாடுதான் முன்னணியில் உள்ளது. தஞ்சை மாவட்டத்தில் மின்சார வசதிபெற்ற கிராமங்களின் எண்ணிக்கை இந்தப் பதினைந்து ஆண்டுக் காலத்தில் அதிகரித்துள்ளது.

| | | |
|---|---|---|
| முதல் ஐந்தாண்டுத் திட்டத் தொடக்கத்தில் | *248* | ஊர்கள் |
| இரண்டாம் திட்டத் தொடக்கத்தில் | *291* | ,, |
| மூன்றும் திட்டத் தொடக்கத்தில் | *423* | ,, |
| மூன்றும் திட்ட முடிவில் | *632* | ,, |

நான்காவது திட்டக் காலத்தில் தஞ்சை மாவட்டத்தில் பெரும்பாலான கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்படும்.

**திருவாரூர் மின்சாரக் கிளை நிலையம்**



மக்கள் மனதில் ஒளி உண்டாக்குவது கல்வி என்னும் விளக்கு. உள்ளத்தில் ஒளி உண்டானால் வாக்கில் ஒளி உண்டாகும். செயலில் ஒளி உண்டாகும். முடிவாக நாட்டிலும் ஒளி உண்டாகி நன்மைகள் பெருகும்.

# கல்வி விளக்கு



ஐந்தாண்டுத் திட்டங்களில் கல்வி வளர்ச்சிக்கென பல அம்சங்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றின் பயனாக இன்று தமிழ் நாட்டில் எங்கு நோக்கினும் பள்ளிகள் காட்சி அளிக்கின்றன. ஏழை எளியவர்—செல்வந்தர் என்ற வேறுபாடின்றி அனைவரும் கல்வி கற்று முன்னேற்றமடைந்து வருகின்றனர். இந்த முன்னேற்றம் தஞ்சை மாவட்டத்திலும் பிரதிபலிக்கிறது.

## தொடக்கப் பள்ளிகள்

1951-ல் முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமானபோது இம்மாவட்டத்தில் 1,921 தொடக்கப் பள்ளிகளே இருந்தன.



கும்பகோணத்தில் கட்டப்படும்
அரசாங்கப் பெண்கள் கல்லூரி

இவற்றில் 1.41 லட்சம் சிறுவர்களும், 68,017 சிறுமியர்களும் படித்தனர். தற்போது தொடக்கப் பள்ளிகளின் எண்ணிக்கை 3,054 ஆகும். 2.83 லட்சம் சிறுவர்களும், 1.97 லட்சம் சிறுமியர் களும் படிக்கின்றனர். சிறுவர்கள் எண்ணிக்கை இரண்டு மடங் கும், சிறுமியர்களின் எண்ணிக்கை மூன்று மடங்கும் அதிகரித் துள்ளன. மாவட்டத்தில் பள்ளி செல்லும் வயதுடைய குழந்தை களில் 95 சத வீதத்தினர் பள்ளிகளில் படிக்கின்றனர்.

1959–60ல் 279 ஆதாரப் பள்ளிகளில் 61,000 குழந்தைகள் படித்து வந்தனர். தற்போது 488 ஆதாரப் பள்ளிகள் உள்ளன. 1.27 லட்சம் குழந்தைகள் படித்து வருகின்றனர். இப்பள்ளிகளில் பயிலும் குழந்தைகளுக்கு நூற்பு, நெசவு ஆகியவற்றில் தொழிற் பயிற்சி தரப்படுகிறது.

முதல் திட்ட ஆரம்பத்தில் 44 உயர்நிலைப் பள்ளிகளில் 29,000 மாணவர்கள் படித்து வந்தனர். தற்போது 184 உயர் நிலைப் பள்ளிகள் உள்ளன. மாணவர்கள் எண்ணிக்கை 1.05 லட்சம்.

1951ல் 153 ஹரிஜன நலப் பள்ளிகளில் 10,727 மாணவர்கள் படித்து வந்தனர். அதற்குப் பிறகு பள்ளிகளின் எண்ணிக்கை அதிகரிக்கவில்லை. எனினும், மாணவர்களின் எண்ணிக்கை தற்போது 16,600 ஆகும்.

**கல்லூரிகள்**

முதன் முதலாக இம்மாவட்டத்தில் கும்பகோணத்தில் அரசாங்கக் கலைக் கல்லூரி ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. பிறகு அரசாங்கத்தாலும், கல்வி வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட தனி நபர்களாலும் மாயவரம், அதிராம்பட்டினம், தஞ்சாவூர், பூண்டி, கும்பகோணம் ஆகிய ஐந்து இடங்களில் கல்லூரிகள் நிறுவப்பட்டன. தற்போது பெண்களுக்கான ஒரு கல்லூரியை அரசாங்கம் தஞ்சாவூரில் நிறுவியுள்ளது. ஒரத்தநாடு என்னுமிடத்தில் ஒரு பயிற்சிக் கல்லூரி உள்ளது. கரந்தை புலவர் கல்லூரியும், சமஸ்கிருதம், தமிழ் மொழிகளுக்காக ராஜா கல்லூரியும், திருவையாற்றில் சங்கீதக் கல்லூரியும் உள்ளன.

தஞ்சையிலும், நாகப்பட்டினத்திலும் தொழிற் பயிற்சி நிறுவனங்களும், தஞ்சையில் ஒரு மருத்துவக் கல்லூரியும் உள்ளன.

1957-ல் 2 ஆசிரியர் ஆதாரப் பயிற்சிப் பள்ளிகள் இருந்தன. 160 பேர் பயிற்சி பெற்றனர். 1965–66ல் இப்பள்ளிகளின் எண்ணிக்கை 13. பயிற்சி பெற்றவர்கள் 1,627.

1951–ல் மாணவர்கள் தங்குவதற்கான அரசாங்க மாணவர் விடுதி ஒன்றுகூட இல்லை. தற்போது ஹரிஜன நலத் துறையின





ரால் 27 விடுதிகள் நடத்தப்படுகின்றன. இவற்றில் 7 விடுதிகள் பெண்களுக்கும், 20 விடுதிகள் ஆண்களுக்கும் ஆனதாகும். இவையல்லாமல் 48 மாணவர் இலவச விடுதிகள் உள்ளன. சுமார் 2,800 அனாதைக் குழந்தைகளுக்கு இவை ஆதரவளிக்கின்றன.

## இலவச உணவு

பள்ளி மாணவர்களுக்கு இலவச நண்பகல் உணவு வழங்கும் திட்டம் 1955-ல் ஆரம்பிக்கப்பட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் 2,886 தொடக்கப்பள்ளிகளில் 1.3 லட்சம் மாணவர்களுக்கும், 41 உயர்நிலைப் பள்ளிகளில் 1,560 மாணவர்களுக்கும் இலவச உணவு வழங்கப்படுகிறது.

சுமார் 46,000 மாணவர்களுக்கு இலவசமாக சீருடைகள் வழங்கப்பெற்றன. தொடக்கப் பள்ளிகளில் முதல் மூன்று வகுப்புகளில் பயிலும் ஏழை மாணவர்களுக்கு சிலேட்டும், புத்தகங்களும் இலவசமாக வழங்கப்படுகின்றன.

## நூல் நிலையங்கள்

தஞ்சாவூரில் 1951-ல் தல நூல் நிலையக் குழு அமைக்கப்பட்டது. 1952-ல் மாவட்ட மத்திய நூல் நிலையம் ஆரம்பிக்கப்பட்டது. பிறகு மாவட்டமெங்கும் படிப்படியாக நூல் நிலையங்கள் ஆரம்பிக்கப்பட்டன. 1955–56ல் 12 கிளை நூல் நிலையங்களும், 20 நூல் விநியோக நிலையங்களும் இருந்தன. தற்போது 61 கிளை நூல் நிலையங்களும், 270 நூல் விநியோக நிலையங்களும் உள்ளன.

மருத்துவக் கல்லூரி

நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படைத் தேவை யாக இருப்பது போக்குவரத்து. சாலைகள், போக்குவரத்து வசதி களைப் பெருமளவுக்குப் பூர்த்தி செய்கின்றன. விவசாயமும், இதர தொழில்களும் வளர்ச்சி அடைய உதவுகின்றன.

# நாட்டின் நரம்புகள்



நல்ல தரமான சாலைகள் இருந்தால், போக்குவரத்து அதிக மாவதுடன், பொருள்களை ஏற்றிச் செல்லும் அளவும் அதிகரிக் கிறது. உதாரணமாக ஒரு மாட்டுவண்டி சாதாரணமான மண் பாதையில் 1,000 பவுண்டு எடையுள்ள பொருள்களைத்தான் ஏற் றிச் செல்ல முடியும். கப்பி போட்ட சாலையில் 1,500 பவுண்டு, நீர் போட்டு கெட்டித்த சாலையில் 2,250 பவுண்டு, தார் போடப் பட்ட சாலையில் 3,000 பவுண்டு, சிமெண்ட் காங்கிரீட் சாலையில் 4,500 பவுண்டு எடையுள்ள பொருள்களை ஏற்றிச் செல்ல முடியும்.

சிமெண்ட் காங்கிரீட் சாலை



4500 பவுண்டு

தார் போட்ட சாலை



3000 பவுண்டு

நீர் ஊற்றி கெட்டித்த சாலை



2250 பவுண்டு

கப்பி போட்ட சாலை



1500 பவுண்டு

மண் சாலை



1000 பவுண்டு

ஐந்தாண்டுத் திட்டங்கள் ஆரம்பமாவதற்கு முன்பு தஞ்சை மாவட்டத்தில் போதுமான சாலை வசதிகள் இல்லை. இருந்த சாலைகளும் செம்மையானவை அல்ல. முதல் ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கப்பட்ட பிறகுதான் இணைப்பான முறையில் நல்ல சாலைகள் போடப்பட்டன.

## கிராமங்களுக்குச் சாலைகள்

அங்கங்கே சிதறிக் கிடந்த கிராமங்களை ஒன்றாக இணைக்கும் வகையில் சாலைகள் போடும் பணிக்கு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலிடம் தரப்பட்டது. புதிதாக 132 மைல் நீளத்துக்கு நல்ல சாலைகள் போடப்பட்டன. இதல்லாமல் 100 மைல் நீளச் சாலைக்குக் கப்பியிடப்பட்டது.

தஞ்சாவூர் – திருவையாறு சாலைக்கு சிமெண்ட் காங்கிரீட் போடப்பட்டது: ஆனைக்காரன் சத்திரத்துக்கு அருகில் கொள்ளிடத்துக்குக் குறுக்கே ரூபாய் 34.5 லட்சம் செலவில் நவீன முறைகளைக் கையாண்டு ஒரு பெரிய பாலம் கட்டப்பெற்றது.இப்பாலமானது தென்ஆர்க்காடு மாவட்டத்தையும் தஞ்சை மாவட்டத்தையும் இணைப்பதாகும். அய்யம்பேட்டை கணபதி அக்ரஹாரம் சாலையில் குடமுருட்டியாற்றுக்குக் குறுக்கே ஒரு பாலமும், பட்டுக்கோட்டை அறந்தாங்கி சாலையில் அக்னியாற்றுக்குக் குறுக்கே ஒரு மூழ்குப் பாலமும் கட்டும் வேலை முதல் திட்டக் காலத்தில் மேற்கொள்ளப்பட்டது.

அரசாங்க பஸ் போக்குவரத்துச் சாலைகளில் பெரும் பகுதிக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் தார் போடப்பட்டது. முதல் திட்ட ஆரம்பத்தில் 21 மைல் நீளச் சாலைகளே நல்ல முறையில் இருந்தன. ஆனால் இரண்டாவது திட்டக் கால முடிவில் 910 மைல் நீளச் சாலைகள் உயர்தரமான நிலையில் இருந்தன. இதல்லாமல், இரண்டாம் திட்டக் காலத்தில் 308 மைல் நீளச் சாலைகளுக்குப் புதிதாகக் கப்பி போடப்பட்டது. குறிப்பாக ஆறு பெரிய பாலங்கள் கட்டப்பட்டன.

(1) காவேரிக்குக் குறுக்கே அய்யம்பேட்டை கணபதி அக்ரஹாரம் சாலையில் கட்டப்பட்ட பாலம்.



ஆவுடையார் கோயிலுக்கு அருகில்
கட்டப்பட்டுள்ள பாலம்

(2) பாபநாசம் – கபிஸ்தலம் சாலையில் காவேரி, அரசலாறு, குடமுருட்டியாறு, திருமலைராஜன் ஆறு ஆகியவற்றுக்குக் குறுக்கே கட்டப்பட்ட நான்கு பாலங்கள்.

(3) முத்துப்பேட்டைக்கு அருகே பாமனியாற்றுக்குக் குறுக்கே கட்டப்பட்ட பாலம்.

## மூன்றும் திட்டக் காலத்தில்......

முதல் இரு திட்டக் காலங்களைக் காட்டிலும், மூன்றுவது திட்டக் காலத்தில் சாலை அபிவிருத்திப் பணிகள் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டன. நாகப்பட்டினம் - தஞ்சாவூர் சாலையில் 9-வது மைல் வரை சிமெண்ட் காங்கிரீட் போடப்பட்டது. கல்லணை - காவேரிப்பட்டினம் சாலை, கல்லணை வாய்க்கால் சாலை, பூந்தோட்டம் - நாச்சியார்கோவில் சாலை, கண்ணூரார் - திருப்புவன வாசல் சாலை, நாகூர் – ஆளியூர் சாலை ஆகியவற்றுக்குக் கப்பி போட்டதையும், வேதாரண்யம் - கோடிக்கரை சாலைக்குத் தார் போட்டதையும் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

### பாலங்கள்

சிறியதும் பெரியதுமான பல பாலங்கள் கட்டப்பட்டன. இவற்றுள் ஆவுடையார் கோயிலுக்கு அருகில் வெள்ளாறுக்குக் குறுக்கே கட்டப்பட்ட பாலமும், அம்மாப்பேட்டைக்கு அருகில் வெண்ணாற்றின் குறுக்கே கட்டப்பட்ட பாலமும், வேதாரண்யத்துக்கு அருகில் அடப்பாற்றின் குறுக்கே கட்டப்பட்ட பாலமும், மாயவரம் - முத்துப்பேட்டை சாலையில் வெட்டாற்றின் குறுக்கே கட்டப்பட்ட பாலமும், திருநீலக்குடி - கடலங்குடி சாலையிலும், தாராசுரத்துக்கு அருகிலும் அரசலாற்றின் குறுக்கே கட்டப்பட்ட இரு பாலங்களும் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கவையாகும்.

தல ஊராட்சி மன்றங்களின் பராமரிப்பில் இருந்து வந்த பஸ் போக்குவரத்து சாலைகளை இரண்டாவது, மூன்றுவது திட்டக் காலத்தில் அரசாங்கமே எடுத்துக்கொண்டது.

முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் 660 மைல் நீளச் சாலைகளே அரசாங்கப் பராமரிப்பின் கீழ் இருந்தன. மூன்றுவது திட்டக் கால முடிவில் இந்த அளவு 1,363 மைல்களாக அதிகரித்திருந்தது.

### மத்திய சாலை நிதித் திட்டம்

மேற்சொன்னவையல்லாமல், மூன்றும் திட்டக் காலத்தில் மத்திய சாலை நிதித் திட்டத்திலிருந்தும் சில சாலை அபிவிருத்தித் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றுள், ஒரத்த நாட்டிவிருந்து கும்பகோணத்துக்கு 30 மைல் நீளத்துக்கு, இடையில் 6 பாலங்களுடன் புதிதாகச் சாலை அமைக்கும் திட்டம் குறிப்பிடத்தக்கதாகும். இந்த 6 பாலங்களுள் 5 பாலங்கள் கட்டி முடிக்கப்பட்டுள்ளன. தஞ்சாவூரிலிருந்து மிலட்டூர், ஆவூர் வழியாக வலங்கைமான் செல்லும் புதிய சாலையில் கப்பி போடும் வேலையும், இதர அபிவிருத்தி வேலைகளும் மேற்கொள்ளப்பட்டன. புண்ணிய ஸ்தலமாகிய ஆவுடையார் கோயில் என்ற க்ஷேத்திரத்தை ராமநாதபுரம் மாவட்டத்துடன் இணைக்கும் சாலையும் நிர்மாணிக்கப்பட்டு வருகிறது. இதன் பயன் மிகவும் அதிகமாக இருக்கும்.

மீன் விற்பனையைத் துரிதப்படுத்துவதற்காக, சீர்காழி, மாயவரம் வட்டங்களில் உள்ள மீனவர் குடும்பங்களை நெடுஞ் சாலைகளுடன் இணைப்பதற்கான சாலைகள் போடும் பணி மத்திய அரசாங்கத்தின் உதவியுடன் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதற்காகும் செலவு ரூபாய் 10 லட்சம். திரு ஆரூரான் சர்க்கரை ஆலைக்கும் சாலை வசதி செய்து தரப்பட்டுள்ளது.

## சிறந்த சாதனை

தமிழ்நாட்டில் சராசரி ஒரு சதுர மைல் பரப்பளவுக்கு ½ மைல் நீள சாலையே உள்ளது. ஆனால் தஞ்சை மாவட்டத்தில் ஒரு சதுர மைல் பரப்பளவுக்கு ஒரு மைல் நீளச் சாலை இருக்கிறது. அதுவும் கடந்த பதினைந்து ஆண்டுக் காலத்திற்குள்தான் இந்த அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது.

அகில இந்திய சாலை அபிவிருத்தித் திட்டத்தின்படி, தஞ்சை மாவட்டத்தில் 1981-ம் ஆண்டுக்குள் 3,500 மைல் நீளச் சாலைகள் இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டது. இந்த லட்சிய அளவு தற்போது நிறைவேற்றப்பட்டுவிட்டது.

தஞ்சை மாவட்டத்தில் பெரும்பாலான சாலைகள் நாக சர்ப்பத்தைப்போல் வளைந்து வளைந்து செல்பவை.இடையில் நிறையக் கால்வாய்கள் குறுக்கிடுகின்றன. ரயில் பாதைகளும் குறுக்கிடுகின்றன. எனவே விரைவான போக்குவரத்து சில சமயங்களில் பாதிக்கப்படுகிறது. இக்குறையை நிவர்த்திக்க தஞ்சாவூர், கும்பகோணம், மாயவரம் ஊராட்சி எல்லைக்குள் மேம்பாலங்களும், கீழ் வழிகளும் கட்டும் வேலை நான்காவது திட்டக் காலத்தில் மேற்கொள்ளப்படும்.

## போக்குவரத்து

கார்களும், பஸ்களும், இதர வாகனங்களும் நிச்சயமாகத் தஞ்சையின் பொருளாதார உயர்வைக் காட்டுகின்றன. சில

ஆண்டுகளுக்கு முன்னுல் பஸ்ஸில் பிரயாணம் செய்த நபர்களின் எண்ணிக்கை குறைவு. கிராம மக்கள் பெரும்பாலும் நடந்தே போய்விடுவார்கள். ஆனுல் இன்று பெரும்பாலானவர்கள் பஸ்ஸிலேயே செல்கின்றனர். இதற்குக்காரணம்: அவர்களது பொருளாதார நிலை உயர்ந்திருக்கிறது. பஸ்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது.

## அட்டவணை 11

| | முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் | மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் |
|---|---|---|
| பஸ்களின் எண்ணிக்கை | 209 | 311 |
| பஸ் ரூட்டுகள் | 60 | 176 |
| பஸ் நிலையங்கள் | ஒன்றுமில்லை | 46 |
| பஸ்கள் சென்று வந்த தூரம் | 766 மைல் | 1,217 மைல் |
| லாரிகள் | 75 | 322 |

தற்போது தஞ்சாவூர், கும்பகோணம், மாயவரம் நகரப் பகுதிகளில் 30 பஸ்களும், கிராமப் பகுதிகளில் 281 பஸ்களும் ஓடிக்கொண்டிருக்கின்றன.

தஞ்சாவூர், நாகப்பட்டினம் ஆகிய இரு இடங்களிலிருந்தும் சென்னை, கோயம்புத்தூர், நாகர்கோயில், ராமநாதபுரம் குமிழி, சேலம், வேலூர் ஆகிய இடங்களுக்கு அரசாங்க எக்ஸ்

பிரஸ் பஸ்கள் ஓடுகின்றன. தஞ்சையிலும், நாகப்பட்டினத்திலும் அரசாங்க பஸ் தொழில் பிரிவுகளும் உள்ளன.

**வருமானம்**

சென்னை மோட்டார் வண்டி வரி விதிப்புச் சட்டம் - 1931; சென்னை மோட்டார் வண்டி (பிரயாணிகள் மற்றும் சரக்குகள் மீது வரி விதிப்பு) சட்டம் - 1952 ஆகிய இரு சட்டங்களின்படி அரசாங்கத்துக்குக் கடந்த பதினைந்து ஆண்டுகளில் 3.58 கோடி ரூபாய் வருமானம் கிடைத்தது.

பஸ் போக்குவரத்துத் துறையில் 3,510 ஊழியர்கள் தற்போது பணியாற்றுகின்றனர்.

## அட்டவணை 12

| | 1951 | 1956 | 1961 | 1966 |
|---|---|---|---|---|
| பஸ் போக்குவரத்துத் துறையில் உள்ள ஊழியர்கள் எண்ணிக்கை | 600 | 900 | 1,100 | 1,660 |
| லாரி போக்குவரத்துத் துறையில் உள்ள ஊழியர்கள் எண்ணிக்கை | 100 | 400 | 600 | 750 |
| இவை சம்பந்தப்பட்ட இதர தொழில்களில் உள்ள ஊழியர்கள் எண்ணிக்கை | 100 | 460 | 650 | 1,100 |

நோய் நொடியில்லாமல் வாழும் வாழ்க்கை குறைவற்ற செல்வமாகும். நோய்வாய்ப்பட்டாலும் அதற்கான சிகிச்சைகள் மக்கள் அனைவருக்கும் கிடைக்கச் செய்யவேண்டும். க்ஷேமநல அரசாங்கத்தின் கடமைகளில் மக்களுக்கு மருத்துவ வசதி

# நோயற்ற வாழ்வு



செய்து தருவதும் ஒன்றாகும். கடந்த பதினைந்து ஆண்டுகளில் தஞ்சாவூர் மாவட்டத்தில் பரவலான முறையில் மருத்துவ வசதிகள் செய்து தரப்பட்டன. இவைகளால் கிராமங்களில் மட்டுமின்றி, வட்டத் தலைமை இடங்கள் மற்றும் பேரூர்களில் உள்ள மக்கள் பெரும் பயன் அடைந்தனர்.

*1951*-க்கு முன்பு இம்மாவட்டத்தில் காலரா, அம்மை ஆகிய கொள்ளை நோய்களால் மக்கள் பெரும் அவதிக்குள்ளாயினர். கடந்த பதினைந்து ஆண்டுக் காலத்தில் அரசாங்கத்தின் பொதுச்

சுகாதாரப் பணிகளால் இந்நோய்கள் பெருமளவுக்குத் தடுக்கப் பட்டு விட்டன.

1951-லிருந்து இம்மாவட்டத்தில் பிளேக் நோய் தோன் றவே இல்லை.

கடந்த மூன்று திட்டக் காலங்களிலும் மலேரியா, தொழு நோய் ஆகியவற்றை அகற்றுவதற்கான திட்டங்கள் தீவிரமாகச் செயல்படுத்தப்பட்டன.

முதல் திட்டக் காலத்தில் தேசிய மலேரியா தடுப்புத் திட் டம் அமுலாக்கப்பட்டது. பின்னர் இரண்டாவது, மூன்றுவது திட்டக் காலங்களில் தேசிய மலேரியா ஒழிப்புத் திட்டம் மேற் கொள்ளப்பட்டது. தற்போது மாவட்டத்தின் எல்லாப் பகுதி களிலும் இத்திட்டம் அமுலில் உள்ளது. யானைக்கால் நோய்த் தடுப்புத் திட்டமும், சிறு அம்மை நோய்த் தடுப்புத் திட்டமும் மேற்கொள்ளப்பட்டன.

## அட்டவணை 13

| | காலரா | | அம்மை | |
|---|---|---|---|---|
| | நோயாளிகள் | இறந்தவர்கள் | நோயாளிகள் | இறந்தவர்கள் |
| 1951 | 2,648 | 1,764 | 1.069 | 381 |
| 1966 | 45 | 12 | 26 | 18 |

யானைக்கால் நோய்த் தடுப்புத் திட்டத்தால், இத்திட்டம் அமுல் நடத்தப்பட்ட பகுதிகளில் 3.30 லட்சம் மக்கள் பய னடைந்தனர். 7.5 லட்சம் மக்களுக்கு பி. சி. ஜி. ஊசி போடப் பட்டுள்ளது. 45 தாய் சேய் நல நிலையங்கள் ஆரம்பிக்கப்பட் டுள்ளன.

### பள்ளிகளில் சுகாதாரம்

இதற்கென 1961-62ல் ஒரு திட்டம் தொடங்கப்பெற்றது. 28 பஞ்சாயத்து யூனியன்கள் தங்கள் வட்டாரங்களில் இதை

நிறைவேற்றியுள்ளன. பள்ளிகளில் மருத்துவப் பரிசிலனை நடத்தும் பரீட்சார்த்தத் திட்டமொன்று 1965 ஜூலையில் ஆக்கூரில் அமுல் நடத்தப்பட்டது. 30 பள்ளிகளில் 1,524 மாணவர்கள் பரிசோதிக்கப்பட்டனர்.



ஆரம்பச் சுகாதார நிலையங்களுடன் இணைக்கப்பட்டுள்ள குடும்பக் கட்டுப்பாடுப் பிரிவுகளின் மூலம் 10,427 பேர் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொண்டனர்.

## காச நோய் மருத்துவம்

1951 டிசம்பரில் செங்கிப்பட்டியில் காச நோய் மருத்துவமனையொன்று 2 லட்சம் ரூபாய் நன்கொடையுடன் ஆரம்பிக்கப்பட்டது. பிற்பாடு தஞ்சாவூர் மாவட்ட ஆட்சிக் குழுவிடம் உபரியாக இருந்த நிதியிலிருந்து 10 லட்சம் ரூபாய் இதற்குத் தருமாறு அரசாங்கம் உத்தரவிட்டது. ஒரு டிரஸ்ட் போர்டால் இம்மருத்துவமனை தற்போது நிர்வகிக்கப்படுகிறது.

ஆரம்பத்தில் 90 படுக்கைகளே இங்கு இருந்தன. தற்போது 450 படுக்கைகள் உள்ளன. இதில் 125 படுக்கைகள் ஏழை எளியவர்களுக்கென்று தனியாக ஒதுக்கப்பட்டு, மருந்து, உணவு ஆகியவை இலவசமாகவே தரப்படுகின்றன. நோயாளிகளுக்குத் தேவையான பால், முட்டை, காய்கறிகள் ஆகியவை இங்குள்ள பால்பண்ணை, கோழிப்பண்ணை, காய்கறித் தோட்டங்களிலிருந்தே கிடைக்கின்றன.

தற்போது இம்மாவட்டத்தில் அரசாங்கத் தலைமை மருத்துவமனை ஒன்றும், அரசாங்க மருத்துவமனைகள் மற்றும்

டிஸ்பென்ஸரிகள் 43-ம், அரசாங்கத் தொழு நோய் சிகிச்சை மருத்துவமனை ஒன்றும் இருக்கின்றன.

இரண்டாவது, மூன்றுவது திட்டக் காலங்களில் சீர்காழி, அறந்தாங்கி, நன்னிலம், பாபநாசம், ஒரத்தநாடு, தேரழுந்தூர், வடசேரி ஆகிய இடங்களில் உள்ள தல நிதி மருத்துவமனைகளை யும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் அமைக்கப்பட்ட பிறகு 28 மருத்துவ நிலையங்களையும் அரசாங்கம் எடுத்துக்கொண்டது.

## அபிவிருத்தி

இரண்டாவது திட்டக் காலத்தில் நாகப்பட்டினத்தில் உள்ள அரசாங்கத் தலைமை மருத்துவமனையிலும், கும்பகோணம், மாய வரம், திருவாரூர், மன்னார்குடி, திருத்துறைப்பூண்டி ஆகிய இடங்களில் உள்ள அரசாங்க மருத்துவமனைகளிலும் ரத்தச் சேமிப்பு நிலையம், எக்ஸ்ரே பிரிவு, அறுவை சிகிச்சைப் பிரிவு, மகப்பேறு பிரிவு என்று பலவகையான பிரிவுகளுக்குத் தனிக் கட் டிடங்கள் கட்டித்தரப்பட்டன. நர்சு விடுதிகளும் கட்டப்பட்டன. தஞ்சாவூர் ராஜா மிராசுதார் மருத்துவமனையில் மாவட்டப் பொதுச் சுகாதாரப் பரிசோதனைக்கூடம் ஆரம்பிக்கப்பட்டது. சீர்காழி, மன்னார்குடி, பட்டுக்கோட்டை, மாயவரம்ஆகிய இடங் களில் உள்ள அரசாங்க மருத்துவமனைகளில் தொழுநோய் சிகிச்சைப் பிரிவு தொடங்கப்பெற்றது. கோனேரிராஜபுரம், கபிஸ்தலம், ஆக்கூர், ஆலங்குடி, தேவூர், ஆலத்தம்பாடி, வேதா



ரண்யம் ஆகிய இடங்களிலும் இன்னும் வேறு 5 இடங்களிலும் ஆரம்பச் சுகாதார நிலையங்கள் ஆரம்பிக்கப் பட்டன.

## மூன்ருவது திட்டக் காலத்தில்......

தாமரக்கோட்டையில் ஆரம்பச் சுகாதார நிலையமும், நாகப் பட்டினம் அரசாங்கத் தலைமை மருத்துவமனை மற்றும் சீர்காழி, திருவாரூர், பட்டுக்கோட்டை, மாயவரம், மன்னூர்குடி, கும்ப கோணம் ஆகிய இடங்களில் உள்ள அரசாங்க மருத்துவமனை களில் குடும்பக் கட்டுப்பாடு கிளினிக்குகளும், திருத்துறைப் பூண்டி, நன்னிலம், அறந்தாங்கி, ஒரத்தநாடு, பாபநாசம் ஆகிய இடங்களில் உள்ள அரசாங்க மருத்துவமனைகளில் குடும்பக் கட் டுப்பாடு அறுவை சிகிச்சைப் பிரிவுகளும் ஆரம்பிக்கப்பட்டன.

## மருத்துவக் கல்லூரி

தஞ்சாவூரில் இரண்டாவது திட்டக் காலத்தில் (1958 ஜூலை) ஒரு மருத்துவக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பத் தில் 75 மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். இந்த எண் ணிக்கை 1961-62ல் 100 ஆகவும், 1963-64ல் 125 ஆகவும் உயர்ந் தது. 1965 நவம்பரில் முதல் எம். பி. பி. எஸ். வகுப்பில் 55 மாண வர்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டனர்.

தஞ்சை மருத்துவக் கல்லூரி மருத்துவ மனை



1966 ஏப்ரல் மாதத்தில் இக்கல்லூரியில் இருந்த மாணவர்களின் எண்ணிக்கை (ஹவுஸ் சர்ஜன் உள்பட) மொத்தம் 738. இவர்களுள் ஆண்கள் 554. பெண்கள் 184. 368 மாணவருக்கான விடுதியும், 104 மாணவியருக்கான விடுதியும் உள்ளன. 360 மாணவர்களுக்கு அரசாங்க உபகாரச் சம்பளம் கிடைக்கிறது.

இக்கல்லூரியின் பல பாடப் பிரிவுகளில் ஆராய்ச்சி வேலைகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. பரிசோதனைக்கூட டெக்னீஷியன் பாடத் திட்டமும், சுகாதார இன்ஸ்பெக்டர் பாடத்திட்டமும் 1966 மார்ச் மாதத்திலிருந்து இக்கல்லூரியில் நடத்தப்படுகின்றன.

தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரி மருத்துவமனை 1965 நவம்பர் மாதத்தில் ஆரம்பிக்கப்பட்டது. இதுவும், ராஜா மிராசுதார் மருத்துவமனையும் மாணவர்களுக்குப் பயிற்சி மருத்துவமனைகளாக விளங்குகின்றன. இவைகளில் உள்ள படுக்கைகளின் எண்ணிக்கை 1,174 ஆகும்.

**அறுவை சிகிச்சை**



அகில இந்தியாவிலும், ஹரிஜன முன்னேற்றப் பணிகளில் தமிழ்நாடுதான் முன்னணியில் உள்ளது. ஹரிஜனங்கள் மற்றும் பழங்குடி வகுப்பினரின் முன்னேற்றத்துக்காகக் கல்வி, தொழில், வீட்டு வசதிகள் செய்து தரப்படுகின்றன.

# சமுதாய முன்னேற்றம்



தஞ்சை மாவட்டத்தில் 1951-ல் இருந்த 153 ஹரிஜன நலப் பள்ளிகளில் 10,727 மாணவர்கள் படித்து வந்தார்கள். தற்போது சுமார் 16,600 மாணவர்கள் படிக்கின்றனர். இவர்களுக்கு இலவச மதிய உணவு கொடுப்பதற்காக 37 லட்ச ரூபாயும், புத்தகம், சிலேட்டு ஆகியவைகளை இலவசமாக வழங்குவதற்காக சுமார் 2.60 லட்சம் ரூபாயும் செலவிடப்பட்டுள்ளது. இதுமட்டுமின்றி இலவச ஆடைகள் கொடுப்பதற்காக ஆண்டுதோறும் பெருந் தொகை செலவிடப்படுகிறது. இப்பள்ளிகளைப் புதுப்பித்துக் கட்டுவதற்காக இதுவரை சுமார் 3.50 லட்சம் ரூபாய் செல விடப்பட்டுள்ளது.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமாவதற்கு முன்பு இம் மாவட்டத்தில் அரசாங்க மாணவர் விடுதி ஒன்றுகூட இல்லை. அதற்குப் பிறகு மூன்று ஐந்தாண்டு திட்டக்காலங்களில் 27 அரசாங்க மாணவர் விடுதிகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இவைகளை நிர்வகித்து நடத்துவதற்காக இதுவரை சுமார் ரூபாய் 12.80 லட்சம் செலவிடப்பட்டுள்ளது. இவையல்லாமல் தனியார் நடத்தும் மாணவர் விடுதிகளிலும் ஹரிஜனங்கள், பிற்பட்ட வகுப்பினர், மலைஜாதிப் பழங்குடியினர் ஆகியோர் உள்ளனர். இவர்களுக்காக அரசாங்கம் கடந்த மூன்று திட்டக் காலங்களில் சுமார் ரூபாய் 25 லட்சம் மான்யம் தந்துள்ளது. 50,788 மாணவர்களுக்கு உபகாரச் சம்பளமாக சுமார் ரூபாய் 35.84 லட்சம் தரப்பட்டுள்ளது.

## அரசாங்க உதவி

ஹரிஜனங்கள், மலைஜாதிப் பழங்குடியினர், குற்றப் பரம்பரைப் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டவர்கள் ஆகியோருக்காக ரூபாய் 13.82 லட்சம் செலவில் 2,331 வீடுகளும், குடிசைகளும் கட்டித் தரப்பட்டுள்ளன. இதில் ஹரிஜனங்களுக்காகக் கட்டித் தரப்பட்ட வீடுகள் 1,919; குடிசைகள் 30.

ரூபாய் 23 லட்சம் செலவில், 34,221 வீட்டு மனைகள் பண்படுத்தி வழங்கப்பட்டதுடன், ஹரிஜன் காலனிகளில் பாதை வசதிகள் செய்து தருவதற்காகவும், குடிநீர்க் கிணறுகள் வெட்டுவதற்காகவும் ரூபாய் 8.54 லட்சம் செலவிடப்பட்டது. 1955–ல் புயலால் பழுதடைந்த வீடுகளுக்கு ரூபாய் $1\frac{1}{2}$ லட்சம் செலவில்

போலீஸ் குடியிருப்பு—தஞ்சாவூர்



மராமத்து பார்க்கப்பட்டது. விவசாயிகளுக்கு இலவசமாக ஜோடி மாடுகளை வழங்கியதில் ரூபாய் 8.23 லட்சம் செலவிடப் பட்டது.

அரசாங்கம் மட்டுமின்றி, அந்தந்தப் பஞ்சாயத்து யூனியன் களும் ஹரிஜன அபிவிருத்திப் பணிகளை நடத்தி வருகின்றன. ஒவ் வொரு யூனியனும் தனது கிராமப் பணி மான்யத்தில் 20 சத விகி தத்தை ஹரிஜன முன்னேற்றப் பணிகளுக்காகச் செலவிடுகிறது என்று சொல்லலாம்.

## பொது வீட்டு வசதி

மாநில வீட்டு வசதி போர்டின் ஒரு அங்கமான திருச்சி வீட்டு வசதிப் பிரிவானது தஞ்சை மாவட்டத்தின் வீட்டு வசதித் திட்டங்களை நடத்தி வருகிறது.

அரசாங்க ஊழியர்களுக்குக் குறைந்த வாடகையில் வீடுகள் கிடைப்பதற்காகத் தஞ்சாவூரில் நீலகிரி தெற்குத் தோட்டம் என்ற பகுதியில் வீடுகள் கட்டப்படுகின்றன. மொத்தம் ரூபாய் 62.32 லட்சம் செலவில் 594 பிரிவுகள் கட்டப்படும். இதன் முதல் கட்டமாக 270 பிரிவுகள் கட்டும் வேலை மேற்கொள்ளப் பட்டுள்ளது. இதுவரை ரூபாய் 11.04 லட்சம் செலவிடப்பட் டுள்ளது.

தஞ்சாவூர், மன்னார்குடி, நாகப்பட்டினம், கும்பகோணம், பட்டுக்கோட்டை ஆகிய நகராட்சி மன்றங்கள் தம் பகுதியில் தோட்டிகள் மற்றும் இதர ஊழியர்களுக்கு வீட்டு வசதி செய்து தந்துள்ளன.

தஞ்சையில் புது வீடுகள்



போலீஸ் துறையில் பணியாற்றும் பலவகைப்பட்ட ஊழியர்களில் 1,125 குடும்பத்தினருக்குக் குடியிருப்பு வசதி செய்து தரப்பட்டுள்ளது. 53 பிரிவுகள் கட்டப்பட்டு வருகின்றன. இவையல்லாமல் 200 குடும்பத்தினருக்குத் தற்காலிக வீட்டு வசதி செய்து தரப்பட்டுள்ளது.

### மாதர் நலன்

தற்போது இம்மாவட்டத்தில் 1,941 மாதர் சங்கங்கள் பணியாற்றி வருகின்றன. பெண்களுக்குத் தையல், நூல் பின்னல்வேலை பிரம்பு நாற்காலி, கூடைகள் பின்னுதல் மற்றும் இதர தொழில்களில் பயிற்சி தருவதுடன், சிறு சேமிப்பு இயக்கத்திலும், பொதுச் சேவைகளிலும் இம்மாதர் சங்கங்கள் பங்கு கொள்கின்றன. சிறு குழந்தைகளுக்காகத் தொடக்கநிலைப் பள்ளிகளும் நடத்தப்படுகின்றன. கிராமத் தொண்டர்படை அமைக்கப்பட்டு, சுமார் 33,000 பெண்கள் பயிற்சி பெறுகிறார்கள்.

### வேலை தேடித்தரும் ஸ்தாபனம்

1947லிருந்து மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருந்து வந்த இந்த ஸ்தாபனம், 1956 நவம்பரிலிருந்து மாநில அரசாங்கத்தின் நிர்வாகத்துக்கு மாற்றப்பட்டது. கடந்த மூன்று திட்டக் காலங்களிலும் வேலை வேண்டுமென்று கோரி 1.43 லட்சம் பேர் இந்த ஸ்தாபனத்தில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொண்டார்கள். இவர்களில்

| | |
|---|---|
| முதல் திட்டக் காலத்தில் - | 4,310 பேர் |
| இரண்டாவது திட்டக் காலத்தில் - | 9,881 பேர் |
| மூன்றாவது திட்டக் காலத்தில் - | 18,552 பேர் |

இந்த ஸ்தாபனத்தின் மூலம் வேலையில் அமர்த்தப்பட்டனர்.

